

# she is the bearer of tradition...

IN

## CENTURY SAREES

THE
**CENTURY**
SPG. & MFG. CO., LTD.
CENTURY BHAVAN,
WORLI, BOMBAY-25 DD.

*Century — For 100% cotton textiles*

Adroit/CM/ 45

# புதிய லேவெண்டர் அற்புதம்

ஒய்யாரம்.
நீங்காத
நறுமணம்.

## லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க்




லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க் கன்னி யுகத்தின் நறுமணம். அதைத் தூவிக் கொண்டால், நறுமணப் பொய்கையில் நீராடுவது போன்றிருக்கும்! அத்தனை மனம் கவரும் மணம் கமழும்! அதிமென்மையானது; அதி மேன்மையானது; புதுமலர்ச்சி பூப்பது. ஒவ்வொரு நாளும் லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க் தூவி, இன்பத்தில் திளைப்பீர். அந்த அற்புதமான அனுபவம் பெறுவீர்...இன்றும்... என்றும்!



லக்மே டால்க் ஐந்து வகை நறுமணங்களில் உங்களை அடைகிறது: லேவெண்டர், வெட்டிவேர், கிர்வாண், சந்தனம் மற்றும் ஃப்ளோரல் பிங்க்.

ASP/L-82

# விவா

இரு செயல் புரியும் ஆரோக்கிய பானம்

**பகலில் உடலுக்கு உரமூட்டும்...**
**இரவில் நிம்மதியூட்டும்!**






விவா பருகுங்கள்—சூடாகவோ, குளிர்ந்ததாகவோ. நீருடன் அல்லது பாலுடன் கலந்து. விவாவிலுள்ள ஆடைப்பால் செழுமையாக்கப்பட்டுள்ளது — மால்ட், கோதுமை மற்றும் புரதச் சத்துக்கள் சேர்க்கப்பட்டு. இது உங்கள் திசுக்களுக்கு உரமூட்டி, நரம்புகளுக்கு இதமூட்டி, தசைகளுக்கு நலமூட்டுகின்றது.

காலையில் விவா பருகினால், பகல் முழுவதும் நீங்கள் உயிர்த்துடிப்புடன் விளங்குவீர்கள்! படுக்கும்போது அருந்தினால், இரவு முழுவதும் நிம்மதியுடன் உறங்குவீர்கள்!

விவா, எளிதில் ஜீரணமாகக்கூடிய உணவுப் பானம்—நோயாளிகளுக்கும் பிணியாறி வருபவர்களுக்கும் சஞ்சீவி!

***சுவையில் சிறந்தது—***
***விரைவில் கரைவது !***







இந்தியாவில் தயாரிப்போர்:
**ஜகஜ்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்.,**
ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்:
**வோல்டாஸ் லிமிடெட்**

Shilpi J.I. 3B-21 Tam.



# கல்கி

## பொருளடக்கம்

விரோதிகிருது, ஆனி 27 ★ ஜூலை 11, 1971


| | | | |
|---|---|---|---|
| கட்சிப் பற்றற்ற அரசாங்கம் அத்யாவசியம் | (தலையங்கம்) | ... | 5 |
| ...இன்னுயிர்த் தியாகியர் | ... | ... | 6 |
| காவிரி நீர்ப் பங்கீடு | க. சந்தானம் | ... | 7 |
| மகுடபதி | அமரர் கல்கி | ... | 9 |
| உள்ளொளி பெருக்கும் பள்ளி | குட்டிகிருஷ்ணன் | ... | 14 |
| மனிதனும் மிருகமும் | ஆசார்யாள் அருளுரை | ... | 19 |
| ரொட்டியும் கடலாம்; ... | ருக்மிணி பாலகிருஷ்ணன் | ... | 21 |
| ஆயிரத்தைக் கண்டவர் | பேட்டி: ஏ. சுவாமிநாதன் | ... | 23 |
| கவிதை பிறந்த கதை | பேட்டி: பி. வி. கிரி | ... | 25 |
| பொன்னியின் செல்வன் | அமரர் கல்கி | ... | 26 |
| வீணை (கவிதை) | 'நாணல்' | ... | 35 |
| சுழிக்காற்று | கௌசிகன் | ... | 38 |
| நாளைக்குச் சொல்கிறேன் | அழகிரி விசுவநாதன் | ... | 48 |
| பாடமும் பட்டமும் | நாடோடி | ... | 57 |
| கடிதம் கிழிந்தது | ஜோதிர்லதா கிரிஜா | ... | 60 |
| நெஞ்சின் பார்வை | நா. அனந்தகிருஷ்ணன் | ... | 66 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப்பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம்: | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |



பம்பாய், எஸ்லோ ஸ்தாபனத்தைச் சார்ந்த ஸ்ரீ K. S. அனந்தசுப்பன் அவர்கள் குமாரி செல்வி **சாந்தி,** B.A.க்கும், பம்பாய், வருமான வரி இலாகாவைச் சார்ந்த ஸ்ரீ S. சங்கர நாராயணனின் குமாரரும், பம்பாய் இஞ்சினீயரிங் கன்ஸ்ட்ரக்ஷன் கார்ப்பொரேஷனில் இஞ்சினீயராகப் பணியாற்றும் ஸ்ரீ S. **மகாதேவன்,** B. SC. (ENGG.)க்கும் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!



கிழக்கஞ்சேரி கிராமம் ஸ்ரீ சுப்பிரமணிய அய்யரின் **புத்திரன்** சிரஞ்சீவி **சிவராமகிருஷ்ணனுக்**கும் (Clarion-McCann Advtg. Bombay) பம்பாய் சுப்பிரமணிய அய்யருடைய புத்திரி சௌ. **விஜயலக்ஷ்மி**க்கும் 27-6-71 அன்று பெங்களூரில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 30



இதழ் 50

# கட்சிப் பற்றற்ற அரசாங்கம் அத்யாவசியம்

இன்றுள்ள தில்லி ஆட்சியில் ஜனங்களை ஏமாற்றி சந்தோஷப் படுத்துவதும், கட்சி மாற்றங்களைத் தூண்டுவிக்கும் தந்திரோபாயங்களுமே காணப்படுகின்றன. இந்த ஆட்சியை மாற்றி, இதனிடத்தில் கட்சிப் பற்றற்ற ஒரு சர்க்காரைப் பிரதம மந்திரி இந்திரா அவர்கள் அமைத்தே ஆகவேண்டும் என்று தீர்மானமாக வலியுறுத்துகிறது இன்றைய நிலைமை. ஸ்ரீமதி இந்திரா காந்தி இந்தவிதமான கட்சிப்பற்றற்ற ஒரு மந்திரி சபையைக் கூட்டினால், இன்று கெட்டுப்போன பொது வாழ்வு பெருமளவுக்குச் சீரடையும். உயர் வர்க்கத்தில் இருப்பவர்கள் தங்கள் கடமை பற்றிப் புதிய விழிப்புப் பெற இதுவே வழி. இதனோடு, உலக வல்லரசுகள் மீண்டும் தென் ஆசிய மக்கள்பால் தங்களுக்கு உள்ள கடமையை உணர்ந்து செயலாற்ற வேண்டும் என்று உணரச் செய்யவும் இதுவே வழி.

இன்று உலக வல்லரசுகள் பாகிஸ்தான் போராட்டத்தில் பேச்சளவோடு நிற்கின்றன. யாஹ்யாகானைக் கட்டுப்படுத்துவதற்கு அவை சக்தி பெற்றிருப்பினும், இன்மொழிகளைக் கூறி வாய் வார்த்தையில் மட்டுமே கருத்தை வெளியிட்டு வருகின்றன. யாஹ்யாகான் தம் பயங்கர அடக்குமுறையை நிறுத்தவும், கிழக்கு வங்கத் தலைவர்களுடன் பேச்சு வார்த்தை நடத்திச் சமாதானமாக முடிவு காணவும், இன்று இந்தியாவுக்கு வந்துள்ள அகதிகள் நம்பிக்கையுடன் கிழக்கு வங்கத்துக்குத் திரும்புமாறு செய்யவும் வல்லரசுகள் தமது சக்தியைப் பிரயோகிக்க முடியும். ஆனால் அதைச் செய்யவில்லை. அதைச் செய்யும்படி வற்புறுத்தும் வழியும் மேலே சொன்னதேயாகும். இதை சர்வதேச வல்லரசுகளுக்கு வன்மையாக உணர்த்துவது புது மந்திரி சபையின் முதற் காரியமாகும். மேற்சொன்னபடி வல்லரசுகள் உடனடியாகத் தமது சக்தியைப் பிரயோகிக்காவிடில், இந்தியா வாங்கியுள்ள அந்நியக் கடன்களைத் திரும்பக் கொடுக்கும் காரியத்தை நாம் இப்போதைக்குக் கவனிக்க முடியாது என்று மரியாதையாக ஆனால் கண்டிப்பாக உலக வல்லரசுகளுக்குத் தெரிவிக்க வேண்டும். பாகிஸ்தானின் உள்நாட்டுப் போரால் இந்தியாவுக்கு ஏற்பட்டுள்ள பெரும் சுமை காரணமாக, மற்ற நிதிக் கடமைகளை ஆற்றக் கூடிய வசதி இந்தியாவுக்கு இல்லை என்பதை எடுத்துக் காட்ட வேண்டும். யாஹ்யாகானின் வன்முறைக்கும் பயங்கர ஆதிக்கத்துக்கும் ஊக்கம் தருகிற ரீதியிலேயே உலக வல்லரசுகள் நடந்துகொண்டால் கிழக்கு வங்கத்திலிருந்து இந்தியாவுக்கு ஓடி வரும் அகதிகளின் எண்ணிக்கை மேலும் வெள்ளமாகப் பெருகும். ஏற்கனவே இந்தியாவுக்குள்ள பெருத்த வரவு செலவு சிரமங்களோடு இந்த மலை போன்ற பாரமும் சேர்ந்தால் சமாளிக்கவே இயலாது. இந்த நிலையில், பாகிஸ்தான் ஜனாதிபதியின் தவறான போக்கைத் திருத்த முற்படாத வல்லரசுகளுக்கு நாம் பட்டுள்ள கடனைத் திருப்ப மறுப்பது கூட நியாயமே ஆகும்.

(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.)



வியத்தகுமுறையில் விண்வெளிப் பயணம் புரிந்ததோடு விண்ணுலகையே எய்தி உலகைத் துயரில் ஆழ்த்திய வ்லாடிஸ்லாவ் வால்காவ், ஜார்ஜி டெப்ரோவால்ஸ்கி, விக்டர் பாட்ஸயேவ்.

# விண்வெளி கண்ட இன்னுயிர்த் தியாகியர்

இருபத்து நாலு நாட்கள் விண்வெளியில் சஞ்சரித்து, விஞ்ஞான சரித்திரத்திலேயே புதுமை படைத்த ருஷிய விண்வெளி வீரர்கள் ஜார்ஜி டெப்ரோவால்ஸ்கி, வ்லாடிஸ்லாவ் வால்காவ், விக்டர் பாட்ஸயேவ் ஆகிய மூவரும் துர்மரணமடைந்த செய்தி உலகம் முழுவதையும் உலுக்கி விட்டது. ஜயசாலிகளாகத் திரும்பிய அம்மூவரைப் போற்றிப் புகழ்ந்து வரவேற்பு நல்குவதற்காக விண்கலத்தைத் திறந்தபோது மூவரையும் உயிரற்ற உடலங்களாகக் கண்டது எப்பேர்ப்பட்ட பரிதாபம்! அறிவுத் தேட்டத்துக்காகப் பிராணத் தியாகம் புரிந்த அம்மூவரின் ஆன்ம சாந்திக்காக அகில உலகமும் பிரார்த்தனை செலுத்துகிறது.

இந்த மர்ம மரணம் பற்றிப் பலவிதமான ஹேஷ்யங்கள் கூறப் படுகின்றன; ஆராய்ச்சிகள் தொடங்கப்பட்டுள்ளன. அவற்றின் விஞ்ஞானபூர்வமான முடிவு ஒருபக்கம் இருக்கட்டும். இந்த மகத்தான சோக சம்பவத்திலிருந்து நாம் வேறு ஒரு படிப்பினை பெறுகிறோம். ருஷியா முதலில் விண்வெளிக் கலம் செலுத்தியபோது அனுப்பப்பட்ட முதல் உயிரினமான லைக்கா என்ற நாய் மரணமுற்றது. விண்வெளி விஞ்ஞானத்தில் தேர்ந்த மற்றொரு வல்லரசான அமெரிக்காவிலும் அபல்லோ-1 என்ற கலம் புறப்படும் முன்பு தரையிலேயே எதிர்பாராத விதமாய்த் தீ விபத்துக்கு உள்ளாகி மூவர் பலியானது நினைவிருக்கலாம். இப்போது விண்வெளி விஞ்ஞானத்தில் ருஷியா முற்றறிவு பெற்று அனுப்பிய மூவரும் காலகதிக்கு வசமாகி விட்டனர். மனிதன் அபாரமான அறிவாற்றலில் எத்தனை அற்புதம் சாதித்தாலும், அந்தச் சாதனையின் மகிழ்ச்சியை அவனுக்குத் தருவது கூட வேறொரு அதீதமான சக்தியின் கையில் தான் இருக்கிறது என்பது தெற்றெனத் தெரிகிறது. மறைந்த விண்வெளி வீரர்களுக்காகப் பிரார்த்தனை செய்யும்போதே, நமக்கு அறிவோடு அடக்கமும் பணிவும் தருமாறு அந்த மகா சக்தியிடம் பிரார்த்தனை புரிவோமாக!

# காவிரி நீர்ப்பங்கீடு

**க. சந்தானம்**

இரண்டாயிரம் ஆண்டுகளாகக் காவிரியின் நீர்ப்பாசனத்தால் பழைய சோழ நாடு தற்போது ஏறக்குறைய தஞ்சை, திருச்சி அடங்கிய பிரதேசம் — நெற்களஞ்சியமாகத் திகழ்ந்து வந்திருக்கிறது. காவிரியாறு குடகில் பிறந்து, மைசூரின் மத்தியில் ஓடிக் கொங்கு நாட்டைக் கடந்து வந்த போதிலும், இந்த நாடுகள் அந்நதியின் நீரை நீர்ப்பாசனத்துக்கு உபயோகிக்க முடியவில்லை. பேரளவில் தஞ்சாவூர் மாவட்டத்திலும், ஓரளவு திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுமே கஷ்டமில்லாமல் கால்வாய்களை அமைத்துப் பாசனம் செய்ய முடிந்தது. இந்த நிலை சென்ற நூற்றாண்டின் இறுதியில் மாறியது. விஞ்ஞான வளர்ச்சியால் பெரிய அணைகள் கட்டுவதற்கு வேண்டிய பொறி இயல் அறிவும், சாதனங்களும் உருவாயின. பஞ்சாபிலும் உத்தரப் பிரதேசத்திலும் பிரிட்டிஷ் அரசாங்கத்தில் பெரும் நீர்ப்பாசனத் திட்டங்களை அமுலாக்கினர். 1892ல் வெள்ளத்தைத் தடுப்பதற்கும் நீர்ப்பாசனத்தை ஒழுங்கு படுத்துவதற்கும் காவிரியில் இரண்டு பெரிய அணைக்கட்டுகள் கட்டப்பட்டன. அச்சமயம் மைசூர் ராஜ்யத்தில் மிகவும் திறமையுள்ள திவான்கள் மன்னரின் கீழ் நிர்வாகம் புரிந்து வந்தனர். தமது ராஜ்யத்தின் நடுவே செல்லும் காவிரியின் நீரை நீர்ப்பாசனத்துக்கும், மின்சார உற்பத்திக்கும் பயன்படுத்த அவர்கள் விரும்பியது நியாயமே. பல திட்டங்களைப் போட ஆரம்பித்தனர். அவற்றால் காவிரியின் பழைய பாசனப் பிரதேசங்களுக்குக் குந்தகம் விளையக் கூடாதென்ற நோக்கத்தில் சென்னை — மைசூர் அரசாங்கங்களுக்குள் 1892ல் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. அது மைசூர்த் திட்டங்களை எதிர்க்கவில்லை. ஆனால் இரு அரசாங்கங்களும் கலந்து இருவர் சம்மதத்துடன் புதிய திட்டங்கள் அமுலாக வேண்டும் என்று ஒப்பந்தம் செய்யப்பட்டது. இரு ராஜ்யத் திட்டங்களின் எல்லைகளும், நியதிகளும் வரையறுக்கப்பட்டன.

இந்த ஒப்பந்தத்தின் கீழ் மைசூர் அரசாங்கம் கண்ணம்பாடி (தற்சமயம் கிருஷ்ணராஜ சாகர்) அணைக்கட்டுக்கு அனுமதி கோரிய பொழுது அதைப் பற்றி நீண்ட நாள் சர்ச்சை செய்து 1914ல் ஸர் கிரிப்பித் என்றவரின் மத்தியஸ்தத்துக்கு விடப்பட்டது. அவர் கண்ணம்பாடி அணைக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தார். அதை ஆட்சேபித்துச் சென்னை அரசாங்கம் லண்டனில் உள்ள இந்தியா மந்திரிக்கு அப்பீல் செய்தது. மீண்டும் இரு ராஜ்யங்களிடை பேச்சு வார்த்தைகள் தொடங்கி முடிவில் 1924ல் இறுதியான ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டுக் கண்ணம்பாடி அணை கட்டப்பட்டது.

அந்த ஒப்பந்தத்தின் கீழ் மைசூர் ராஜ்யம் புதிதாக 110,000 ஏக்கரளவுக்குப் பாசன வசதியையும், காவிரி மேட்டூர் திட்டத்தின் கீழ் சென்னை 310,000 ஏக்கர்களுக்குப் பாசன வசதியையும் பெருக்கலாம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. சென்னை அதைவிட அதிகப் பாசனம் ஏற்படுத்தினால், அதில் 60 சதவிகிதத்தை மைசூரும் அதிகரிக்கலாம் என்றும் ஒப்புக் கொள்ளப்பட்டது. கிருஷ்ணராஜ சாகரிலிருந்து எக்காலங்களில் எவ்வளவு தண்ணீர் விடவேண்டும், எவ்வளவு நீரைத் தேக்கலாம் என்பனவும் நிர்ணயிக்கப்பட்டன. இந்த அளவுகளை மீறாமலிருப்பதற்கு இரு ராஜ்யங்களின் இன்ஜினீயர்கள் கூடி முடிவு செய்வதற்கு வழி செய்யப்பட்டது. ஒப்பந்தம் 50 வருஷங்களுக்குச் செல்லுபடியாகுமென்றும், 1974ல் புதிய ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

1960-ம் ஆண்டு வரையில் இரு ராஜ்யங்களும் இந்த ஒப்பந்தத்தின்படி செயல் புரிந்து வந்தன. அதன்பின் மைசூர் மந்திரி சபையினர் அதைப் பற்றிக் குறை கூறி, அது மைசூரின் இயற்கை உரிமைகளைப் பாதிப்பதாக வாதாட ஆரம்பித்தனர். சென்னை அரசாங்கத்தின் அனுமதியின்றி ஹேமாவதி, கபினி ஆறுகளின் மீது அணை கட்டத் திட்டம் போட்டு மத்திய அரசாங்கத்தின் அனுமதி கோரி 1963ல் விண்ணப்பம் கொடுத்தனர். அதைப் பற்றி ஒன்றும் செய்யாமல் மத்திய அரசாங்கம் மௌனமாக இருந்து விட்டது. சென்னை அரசாங்கத்தின் சம்மதம் இல்லாதது இதற்கு ஒரு காரணமாக இருக்கலாம். அப்படியானால் இரு ராஜ்யங்களின் பிரதிநிதிகளைக் கூட்டி ஆலோசித்து முடிவு செய்திருக்கலாம். அவர்கள் ஒத்துப்போகாவிடில், மத்தியஸ்தத்திற்கு அனுப்பியிருக்கலாம். இம்மாதிரி பல ராஜ்யங்களில் ஓடும் நதிகளின் நீர்ப்பங்கீடுகளில் தகராறு ஏற்படலாமென்று எதிர்பார்த்தே அரசியல் சாஸனம், அவற்றைத் தீர்க்க மத்தியஸ்தர் குழுக்களை நியமிக்கச் சட்டமியற்றுவதற்குப் பார்லிமெண்டுக்கு அதிகாரம் அளித்துள்ளது. அதன்படி 1956ம் ஆண்டில் பார்லிமெண்டும் சட்டமியற்றியிருக்கிறது. ஏழாண்டு காலம் மைசூர்த் திட்டங்களைப் பற்றி எவ்வித முடிவும் செய்யாதது மத்திய அரசாங்கத்தின் பெரும் தவறாகும். அதுவே இப்பொழுது மைசூர், தமிழ்நாடு, கேரள ராஜ்யங்களிடை ஏற்பட்டிருக்கும் பூசல்களுக்குக் காரணம். மத்திய அரசாங்கத்தின் தாமதத்தைச் சகிக்க முடியாமல் மைசூர் ராஜ்யம் காவிரியின் உப நதியான ஹேமாவதியில் அணை கட்டுவதாக நிச்சயித்து 30-6-68ல் மைசூர் முதன் மந்திரி அதற்கு அடிக்கல் நாட்டினார். அதோடு கபினி என்ற உபநதியிலும் மற்றோர் அணை கட்டுவதற்குப் பூர்வாங்க வேலைகள் ஆரம்பிக்கப்பட்டன. ஹாரங்கா என்ற நதியிலும் அவ்விதத் திட்டம் போடப்பட்டது.

1924ம் வருட ஒப்பந்தப்படி தமிழ்நாட்டின் சம்மதமின்றி இத்திட்டங்களை அமுல் செய்யக்கூடாதென்று சென்ற ஐந்தாண்டுகளாகத் தமிழக அரசாங்கம் மத்திய அரசாங்கத்தை வற்புறுத்தி வந்திருக்கின்றது. இதை மத்திய மந்திரி திரு கே. எல். ராவும் திட்டக் கமிஷனும் ஏற்றுக்கொண்டு அ

காவிரி குறித்துச் சில புள்ளி விவரங்கள்: காவிரியின் மழை நீர் பிடிக்கும் பிரதேசத்தின் விஸ்தீரணம் 29,130 சதுர மைல். அது மைசூரில் 12,780; தமிழ்நாட்டில் 15,150; கேரளத்தில் 1200 சதுர மைல்களாகப் பரவி யிருக்கிறது. மொத்த நீர் அளவு 68,000 கோடி கன அடிகள். புதிதாக அமைக்கப்படும் ஹேமாவதி நீர்த் தேக்கத்தின் அளவு 2300 கோடி கன அடிகள். பாசனம் ஒரு லட்சம் ஏகரா. கபினியின் பாசனம் 1,30,000 ஏகரா.

திட்டங்களுக்கு அனுமதியும் கொடுக்கவில்லை, கடனும் வழங்கவில்லை.

இத் திட்டங்களைப் பற்றி மைசூர், தமிழ்நாட்டு சர்க்கார்கள் கூடி ஆலோசித்து இருவருக்கும் சம்மதமான முடிவுக்கு வரவேண்டும் என்பதும், மத்தியஸ்தக் குழுவுக்கு விட்டால் அதனால் பெரும் தாமதமாகுமென்பதும் மத்திய அரசாங்கத்தின் வாதம். திரு கே. எல். ராவின் தலைமையில் சென்ற வருஷம் இரண்டு கூட்டங்கள் நடைபெற்றன. சமாதானம் ஏற்படவில்லை. 1924 ஒப்பந்தத்தின் அடிப்படையிலேயே இத்திட்டங்களின் நியாயங்களை நிர்ணயிக்கவேண்டும் என்பது தமிழ்நாட்டு அரசின் கோரிக்கை. அது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பலாத்காரத்தால் மைசூர் மீது சுமத்தப்பட்டது. நீர்ப்பாசனம் மிகவும் குறைந்த மைசூர் ராஜ்யத்தின் நன்மையைக் கொண்டே தீர்மானிக்க வேண்டும் என்பது மைசூர் அரசின் முடிவான வாதம்.

1924ல் மலபார் ஜில்லா சென்னையின் பாகமாக இருந்தது. அது கேரளத்தோடு இணைந்ததும், காவிரியின் உப நதியான கபினி மலையாளத்தின் வழியாகச்செல்வதால் தங்கள் ராஜ்யத்துக்கும் பங்குண்டு என்று கேரள அரசாங்கம் கேட்கிறது. அதிலும் சிறிது நியாயமிருப்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.

மீண்டும் சமரசத்துக்கு வாய்ப்புகள் இருக்கின்றனவென்றும், ராஜ்யங்களின் பிரதிநிதிகள் கூடி ஆலோசிக்க வேண்டும் என்றும் மத்திய அரசாங்கம் வற்புறுத்துகிறது. கவர்னர் ஆட்சியில் மைசூர்ராஜ்யம் இருக்கும் வரை அதன் அரசாங்கம் எவ்வித ஒப்பந்தமும் செய்துகொள்ளுவது நியாயமாகாது. புதிய மந்திரி சபை ஏற்பட்டாலும் சமரசத்திற்கு இடமிருப்பதாகத் தெரியவில்லை.

ஆதலால் வீண் தாமதம் செய்யாமல் இப்பிரச்னையை ஒரு மத்தியஸ்தக் குழுவின் முடிவுக்கு விடுவதே பூசலைத் தீர்க்கும் ஒரே வழியாகும். அப்படிச் செய்தே தீரவேண்டியிருக்கும். மற்றப் பேச்சுக்களெல்லாம் வீண் காலதாமதத்துக்கே உதவும்.

ஏன் மைசூர் அரசாங்கம் மத்தியஸ்தத்துக்குச் சம்மதிக்க மறுக்கிறது என்று பலர் ஆச்சரியப்படலாம். நர்மதா, கோதாவரித் தகராறுகள் மத்தியஸ்தத்துக்கு விடப்பட்டன. ஆனால் அந்த நதிகளில் ஓடும் நீரில் சிறு பாகமே தற்போது உபயோகிக்கப்படுகிறது. எனவே அந்த நதிகளின் விஷயத்தில் இரு கட்சிகளையும் திருப்தி செய்ய மத்தியஸ்தர்களுக்குப் போதிய இடமிருக்கிறது. ஆனால் காவேரியின் பெரும்பான்மையான நீர் இப்பொழுது பாசனத்துக்குப் பயன்படுத்தப்படுகிறது. என்ன முயற்சி செய்தாலும் ஓரளவு கடலில் போவதை முற்றிலும் தடுக்க முடியாது. ஆதலால் கால் பாகத்திற்குக் குறைந்த நீரைப் பற்றியே மத்தியஸ்தம் செய்யப்பட வேண்டும். இல்லாவிட்டால், தமிழ்நாட்டில் இப்பொழுதுள்ள பாசனத்தைக் குறைக்க வேண்டும். இந்த ஒரு காரணத்தாலேயே மத்தியஸ்தத்தைத் தவிர சமாதானத்திற்கு வழியில்லை என்று தெளிவாகிறது.

# அறுபது லட்ச 'அற்புதம்'

ஸ்டேட் பாங்கிலிருந்து அறுபது லட்ச ரூபாயை மோசடியில் பெறப் பார்த்த நபரை இதுவரை கண்டிராத அவசரத்தில் விசாரணை செய்து தண்டித்தாகி விட்டது. குற்றவாளி டெலிபோனில் பிரதமரின் குரலைப் போல் பேசி இவ்வளவு பெரிய தொகையைப் பாரதத்தின் அதிமுக்கியமான பாங்கு பட்டுவாடா செய்யுமாறு பண்ணியதாகச் சொல்லப்படுகிறது. போலீஸ் விசாரணை காரணமாக மர்மங்கள் பல அம்பலமாகும் என்று மக்கள் எதிர்பார்த்தனர். ஆனால் போலீஸார் தமக்கு வழக்கமாக உரிய தைரியத்துடன் பாரதப் பிரதமரைக் குறுக்கு விசாரணை செய்வர் என்று எதிர்பார்க்கலாமா? இப்போது இந்தத் தைரியத்தைப் பார்லிமெண்ட் அங்கத்தினர் தாம் வெளிக் காட்ட வேண்டும். தங்களுக்கு உள்ள உரிமையையும், வாய்ப்பையும் அவர்கள் பயன்படுத்திக் கொண்டு, பிரதமரை நேரடியாகக் கேள்வி கேட்க வேண்டும். கணக்கில் வந்த பணமோ, கணக்கில் வராத பணமோ, அது எப்படி ஆயினும் சரி, கட்சி நிதியைப் பிரதமர் ஸ்டேட் பாங்கில் பத்திரமான பாதுகாப்பில் வைத்திருக்குமாறு தந்திருந்தாரா? அதிலிருந்து செக் அல்லது வேறுவித சட்டரீதியான வவுச்சர் இல்லாமல் அவர் அவ்வப்போது தொகைகள் திருப்பிப் பெறுவது வழக்கமா? பிரதமரிடம் இந்தக் கேள்விகளைக் கேட்க வேண்டும். அதிலிருந்து, ஒரு பெண் குரலை போனில் கேட்டது தவிர, எவ்வித அதிகாரபூர்வமான சாட்சியமும் பெறாத ஒருவரிடம் தேசத்தின் தலைமைப் பாங்கு அறுபது லட்சம் ரூபாயைப் பட்டுவாடா செய்த 'அற்புத'த்தைப் பற்றிய விஷயங்கள் வெளிச்சத்துக்கு வரும். ஸ்டேட் பாங்கில் தமக்கு 'விசேஷ அக்கவுண்ட்' ஏதுமில்லை எனப் பிரதமர் சொல்லியிருப்பதாகத் தெரிகிறது. ஆனால் பாதுகாப்புக்காகப் பணத்தைப் பாங்கியில் வைத்திருப்பது, அக்கௌண்ட் வைத்திருப்பதாகாது. எனவே, உண்மையில் பாதுகாப்புக்காகத் தொகையைப் பாங்கியில் வைத்திருந்தால் அவர் தாம் முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவதாக எண்ணாமல், அதைத் தயங்காமல் ஒப்புக் கொள்ள வேண்டும்.

## பதினன்காம் அத்தியாயம்

## சித்தப் பிரமை

செந்திருவைக் காணவேண்டுமென்று பங்கஜம் துடிதுடித்தாள்.

அவளுடைய ஆவலுக்கு இப்போது புதிய ஒரு காரணம் சேர்ந்து கொண்டது. அந்தக் காரணம் மகுடபதிதான்!

அந்த நிமிஷத்தில் பங்கஜம் செந்திருவைப் பார்த்திருந்தால் அவளுடைய கஷ்டங்களைப் பற்றியெல்லாம் ஒரு வார்த்தை கூடக் கேட்டிருக்க மாட்டாள். ''அடி பொல்லாத திருடி! உனக்குக் கதை பிடிக்காது, காதல் பிடிக்காது, கல்யாணம் பிடிக்காது என்று சொல்லிக் கொண்டிருந்தாயே? கன்னிப் பெண்ணுகவே இருந்து, பள்ளிக்கூட மிஸ்ட்ரஸ் வேலைக்குப் போவதாகச் சொன்னுயே? கடைசியில், இப்படிச் செய்தாய் பார்த்தாயா? சாதுவைப் போல் இருப்பவர்களை நம்பவே கூடாது. பொல்லாத கள்ளி!'' என்று அவள் கன்னத்தை இடித்திருப்பாள். இன்னும் அவளுடைய கழுத்தைக் கட்டிக் கொண்டு, ''அடி பெண்ணே! செந்திரு! அவன் எப்படி இருப்பான்? முதன் முதலில் நீங்கள் எங்கே பார்த்துக் கொண்டீர்கள்? யார் முதலில் பேசியது? நீயா? அவனு? நீ என்ன சொன்னுய்? அவன் என்ன பதில் சொன்னுன்? எல்லாவற்றையும் ஒன்று விடாமல் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் உன் தலையில் மூன்று குட்டுக் குட்டுவேன்!''—என்று உண்மையாகவே தலையில் குட்டிக் காட்டியிருப்பாள்.



# மகுடபதி

### அமரர் கல்கி

இப்படியாகச் செந்திருவிடம் பேச வேண்டும், கேட்க வேண்டும் என்றெல்லாம் பங்கஜத்துக்கு ஆவல் பொங்கிற்று. மேலே நாவல் எழுதுவதற்குக்கூட அவளுக்கு ஒடவில்லை. நாவலாவது, மண்ணுங்கட்டியாவது? தன்னுடைய சிநேகிதி, இணை பிரியாத பள்ளிக்கூடத் தோழி — கதை காதல் என்று பேசினுல் பிடிக்காமல் முகத்தைச் சிணுக்கியவள்—அவள் அல்லவா இப்போது பெரிய கதாநாயகி ஆகிவிட்டாள்? செந்திருவுக்கு ஒரு காதலன் — அவளுக்காக அவன் தன் உயிரைக் கூடத் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறுன்! என்ன அதிசயம்! செந்திருவை மட்டுமில்லை—மகுடபதியைப் பார்க்க வேண்டுமென்று கூடப் பங்கஜம் ரொம்பவும் ஆவல் கொண்டாள். அவன் எப்படி இருப்பான்? சிறு பிள்ளையாய், லட்சணமாய் இருப்பானு? மீசையும் கிசையுமாய் பயங்கரமாயிருப்பானு? கிராப்புத் தலையா? குடுமியா? உச்சிக் குடுமியா? காந்திக் கட்சியைச் சேர்ந்தவன் என்றுல் ஒருவேளை தாடிகூட வளர்த்துக் கொண்டிருப்பானே? சீச்சீ! அப்படி ஒருநாளும் இராது. செந்திருவைப் போன்ற அழகியின் காதலுக்கு உகந்தவனுகத்தான் அவன் இருப்பான். எல்லாம் கொஞ்ச நேரத்தில் தெரிந்து போகிறது. அப்பாவும் போலீஸ் மாமாவும்தான் செந்திருவைக் கையோடு கூட்டிக் கொண்டு வந்து விடுவதாகச் சொல்லி விட்டுப் போயிருக்கிறுர்களே? — ஆனுல் ஏன் இன்னும் அவர்கள் வரவில்லை?

இவ்விதமெல்லாம் பங்கஜம் இரவு பத்து மணி சுமாருக்குத் தன்னுடைய அறையில் தனியாக உட்கார்ந்து சிந்தித்

துக் கொண்டிருந்தாள். வீட்டில் மற்ற எல்லாரும் இரவுச் சாப்பாடு முடிந்து படுத்துக்கொண்டு விட்டார்கள். பங்கஜம் மட்டும், நாவல் எழுதப் போவதாகச் சொல்லி விட்டுத் தன்னுடைய அறைக்கு வந்தாள். அவள் மேஜையின் மேல் மூடியிட்ட விளக்கும், விரித்த காகிதமும், பேனாவும் இருந்தன. ஆனால் காகிதத்தின் தலைப்பில்,

### நாற்பத்தேழாம் அத்தியாயம்

## மாய மனிதன்

என்று போட்டிருந்ததைத் தவிர, அதன் கீழே ஒரு வரிகூட எழுதப்படவில்லை.

கடிகாரத்தில் மணி பத்து 'டாண், டாண்' என்று அடித்தபோது, வாசலில் வண்டிச் சத்தம் கேட்டது. பங்கஜம் அவசரம் அவசரமாக விரைந்து வாசற் பக்கம் சென்றாள். சாலையில் நின்ற மோட்டாரிலிருந்து அவளுடைய தகப்பனார் இறங்கி வருவதைக் கண்டாள். வேறு ஒருவரும் வண்டியிலிருந்து இறங்கவில்லை. காரிலிருந்தபடியே போலிஸ் மாமா ''குட் நைட்'' என்றார். வண்டி போய்விட்டது.

அய்யாசாமி முதலியார் பங்களா வாசலுக்கு வந்ததும், பங்கஜம் அவர் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, ''என்ன சேதி அப்பா! செந்திருவைப் பார்த்தீர்களா? எங்கே பார்த்தீர்கள்? எப்படி இருக்கிறாள்? சௌக்கியமா யிருக்கிறாளா? ஏன் அவளை அழைத்து வரவில்லை? அவர்கள் விடமாட்டோம் என்று சொல்லி விட்டார்களா? என்ன பேசாமல் இருக்கிறீர்களே? ஒன்றும் சொல்லவே மாட்டேன் என்கிறீர்களே?'' என்று சரமாரியாகக் கேள்விகளைப் பொழிந்தாள்.

''நீ இடம் கொடுத்தால்தானே அம்மா, நான் பேசலாம்? எல்லாம் சாவகாசமாய்ச் சொல்கிறேன். உன்னுடைய அறைக்குப் போகலாம் வா!'' என்றார் அய்யாசாமி முதலியார்.

''இதைமாத்திரம் சொல்லிவிடுங்கள். அப்புறம் அனுஷ்டானம் செய்து சாப்பிட்டு விட்டு எல்லாம் விவரமாய்ச் சொல்லலாம். செந்திருவைப் பார்த்தீர்களா? அவள் சௌக்கியமா?'' என்று பங்கஜம் பரபரப்புடன் கேட்டாள்.

''சௌக்கியம்தான்—ஒரு மாதிரியாக அனுஷ்டானம் சாப்பாடு எல்லாம் ஆகி விட்டன. அம்மாளை எழுப்ப வேண்டாம். உன் அறைக்குப் போகலாம், வா! எல்லாம் விவரமாகச் சொல்லுகிறேன்'' என்றார் முதலியார்.



இருவரும் பங்கஜத்தின் அறைக்குப் போனார்கள். முதலியார் ஈஸிசேரில் சாய்ந்து கொண்டார். அவர் அருகில் ஒரு சின்ன நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு பங்கஜம் உட்கார்ந்தாள்.

''என்ன அப்பா, 'ஒரு மாதிரியாகச் சௌக்கியம்' என்கிறீர்களே? ரொம்பக் கவலையா யிருக்கிறதே!'' என்றாள்.

''நாம் கவலைப்பட்டு அவளுக்கு ஒன்றும் செய்வதற்கில்லை அம்மா! எல்லாம் தலையில் எழுதின எழுத்துப்படிதானே நடக்கும்! பாவம், மருதாசலக் கவுண்டர் எவ்வளவோ உத்தமமான மனுஷர். அவர் குடும்பம் ஏன் இப்படித் துரதிர்ஷ்டமாகப் போக வேண்டும்?''

''என்னப்பா அவளுக்கு? சொல்ல மாட்டேன் என்கிறீர்களே? அந்தக் கடுதாசி அவள் எங்கிருந்து எழுதினாளாம்?''

''அந்தக் கடுதாசியைப் பற்றி நாம் காபரா அடைந்ததெல்லாம் வீண்...''

''அப்படியா?''

''ஆமாம். இன்று காலையில் நாங்கள் இங்கிருந்து கிளம்பியதி லிருந்து நடந்ததை யெல்லாம் சொல்லி விடுகிறேன். கேள். நானும், ராவ்பகதூரும் நேரே சிங்கமேட்டுக்குப் போனோம். செந்திருவின் சித்தப்பா ஊரில்தான் இருந்தார். அவரோடு கள்ளிப்பட்டி கார்க்கோடகக் கவுண்டரும் இருந்தார். கள்ளிப்பட்டிக் கவுண்டர் ரொம்பப் பொல்லாதவர் என்று எல்லோரும் சொல்வதுண்டு. ஆனால் ஒரு பொல்லாத்தனத்தையும் நாங்கள் காணவில்லை. பேருக்குக்



கூட வந்திருந்து என்னுடைய உபந்நியாசத்தை அவர் கேட்டாராம்.''

''செந்திரு இப்போது சிங்கமேட்டில் தான் இருக்கிறாளா அப்பா! நானாவது போய்ப் பார்க்கலாமா?''

''இதற்குள் அவசரப்படுகிறாயே? எங்களை ரொம்பவும் மரியாதையாக வரவேற்று உபசாரம் செய்தார்கள். செந்திருவின் விஷயத்தை எப்படிக் கேட்பது என்று நாங்கள் தயங்கிக் கொண்டிருக்கையில் கள்ளிப்பட்டிக் கவுண்டரே அந்தப் பேச்சை எடுத்து விட்டார். 'நீங்கள் எதற்காக வந்திருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும். இந்தக் கடிதம் விஷயமாகத்தான் வந்திருக்கிறீர்கள்!' என்று ஒரு கடிதத்தை எடுத்துப் போட்டார். அது செந்திருவின் கடிதம்



## விநோத சம்பிரதாயம்

முஸ்லிம் திருமணத்தில் மாப்பிள்ளை ஊர்வலமாக வருகிறபோது, மாப்பிள்ளையுடன் கூட காஜியும் திருமணப் பதிவேட்டுடன் வருவார். காஜி திருமண வீட்டில் சம்பந்திகளிடம், "நீங்கள் திருமணத்துக்கு 'மஹர்' எவ்வளவு கட்டப் போகிறீர்கள்?'' என்று விசாரிப்பார். திருமண மண்டபத்தில் காஜி மாப்பிள்ளை பெயரையும், மாப்பிள்ளையின் தந்தை பெயரையும், திருமணப் பெண்ணின் பெயரையும், அவளது தந்தையின் பெயரையும் இரு வக்காலத்து (வக்கீல்) மனுஷர்கள், இரு சாட்சிகள் வைத்துக் கொண்டு அறிவிப்பார்.

திருமணத்துக்குத் தாலி கட்டுவதற்கு முன்னால், "...இவரது புதல்வருக்கும்... இவரது புதல்விக்கும் நடக்கும் இத்திருமணத்தில் 'மஹர்' தொகை இவ்வளவு - இதை ஒத்துக் கொள்கிறீர்களா?'' என்று சம்பந்திகளிடம் வினவுகிறார். சம்பந்திகள் சம்மதம் தெரிவித்த பிறகு ஒரு வக்கீலும், சாட்சியும் பெண்ணின் இருப்பிடத்துக்குச் சென்று, "இவரது மகன்... திருமணத்துக்கு 'மஹர்' இவ்வளவு கட்டியிருக்கிறார். உனக்குச் சம்மதமா?'' என்று கேட்கிறார்கள். மணப்பெண்ணின் சம்மதத்தைப் பெற்ற பிறகு, அவர்கள் சபையில் மணமகள் சம்மதித்து விட்டதாக வந்து அறிவிப்பார்கள். காஜி வைத்திருக்கும் பதிவேட்டில் அவர்களது பெயர்கள் பதிவாகின்றன. அதன் பிறகு மௌல்வி மந்திரம் ஓத, திருமணச் சடங்குகள் தொடருகின்றன.

(எம். ஏ. ரஹீம் அவர்கள் கூறியது.) - பி.எஸ்.எம்.

---

தான். குழந்தை! உன்னுடைய ஞாபகசக்தி சில விஷயங்களில் அபாரமாக இருக்கிறது. கிட்டத்தட்ட நீ எழுதிக் காட்டினபடியே இருந்தது'' என்று சொல்லி முதலியார் பங்கஜத்தைப் பெருமையுடன் பார்த்தார்.

''இருக்கட்டும் அப்பா! செந்திருவைப் பார்த்தீர்களா இல்லையா?''

''அதுதானே சொல்லப் போகிறேன். கேட்டுக் கொண்டே வா! கள்ளிப்பட்டிக் கவுண்டர் பிறகு என்ன சொன்னார் தெரியுமா? எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'இந்தக் கடிதத்தில் எழுதியிருக்கிறது ஒரு மாதிரி உண்மைதான். அந்தப் பெண்ணை ஜெயிலில்தான் வைத்திருக்கிறது. நீங்கள் விடுதலை செய்து கொண்டு போவதாயிருந்தால் ரொம்ப சந்தோஷம். நாங்கள் குறுக்கே நிற்கவில்லை. அதனால் ஏதாவது விபரீதம் உயிர்ச் சேதம் நேர்ந்தால் மட்டும் எங்களைப் பொறுப்பாக்காதீர்கள்! அந்தப் பெண்ணை விடுதலை செய்து கொண்டு போக நீங்கள் இரண்டு பேர் போதாது என்று எனக்குத் தோன்றுகிறது. இன்னும் ஏழெட்டுப் பலசாலிகளான மனிதர்களாவது வேண்டும். அப்புறம் உங்கள் இஷ்டம்' என்று கள்ளிப்பட்டிக் கவுண்டர் சொன்னார். அவர் சொன்னதின் அர்த்தம் எங்களுக்குத் தெரிந்ததும் ரொம்பவும் துக்கம் உண்டாயிற்று.''

பங்கஜம் வியப்புடனும் பயத்துடனும், "என்ன அப்பா! அவர் சொன்னதின் அர்த்தம்? எனக்குப் புரியவில்லையே?'' என்றாள்.

"நீ வீணாகக் கவலைப்படாதே, பங்கஜம்! விதிக்கு யார் என்ன செய்யலாம்? உன் சிநேகிதிக்குச் சித்தப் பிரமை. அதுவும் ரொம்பக் கடுமையான பிரமை!''

''இல்லவே இல்லை; இருக்கவே இருக்காது'' என்று கத்தினாள் பங்கஜம்.

''இல்லாமல் இருந்தால் நல்லதுதான். ஆனால் இருக்கிறதை இல்லையென்று எப்படிச் சொல்ல முடியும்?''

"அவர்கள் சொன்னதுதானே? நீங்கள் நேரில் பார்க்கவில்லையே?''

''இப்படிக் கேட்பாய் என்று எனக்குத் தெரியும். ஆகையினால்தான், கள்ளிப்பட்டிக் கவுண்டர் 'நேரில் காட்டிவிடுகிறேன்' என்று சொன்னபோது நான் சரி என்றேன். ராவ்பகதூர் பிள்ளைக்குக்கூட அவ்வளவு இஷ்டம் இல்லை. 'இவர்கள் சொல்கிறது போதாதா? நாம் திரும்பி விடலாம்' என்றார். நான்தான் போய்ப் பார்த்துவிடலாம் என்று வற்புறுத்தினேன். மருதாசலக்கவுண்டருக்கும்எனக்கும் இருந்த சிநேகத்தைச் சொல்லி, 'அந்தப் பெண்ணைக் கண்ணாலேயாவது பார்த்துவிட்டு வரலாம்' என்றேன். பார்க்காமல் போனால் நீ என்னை இலேசில் விடமாட்டாய் என்றும் சொல்லி வைத்தேன். மத்தியானம் சாப்பிட்ட பிறகு எல்லாருமாகக் கிளம்பினோம்...''

''எங்கே கிளம்பினீர்கள்? அப்படியானால் செந்திரு சிங்கமேட்டில் இல்லையா?''

''பத்து நாளைக்கு முன்பு வரையில் சிங்கமேட்டில்தான் இருந்தாளாம். ஒரு நாளைக்குத் திடீரென்று கிளம்பி ஒருவருக்கும் தெரியாமல் கோயமுத்தூருக்கு ஓடி வந்திருக்கிறாள். ஓடி வந்த இடத்தில் உனக்குக் கடிதம் எழுதியிருக்கிறாள். அந்தச் சமயம் மட்டும் நாம் ஊரில் இருந்திருந்தால் இவ்வளவு தடபுடல் ஏற்பட்டிருக்காது.''

''என்ன அப்பா சொல்கிறீர்கள்? சித்தப்பிரமையோடேயா இந்த ஊருக்கு வந்தாள்?''

''ஆமாம், குழந்தை, ஆமாம்! அந்தச் சமயம் அவ்வளவு அதிகம் இல்லையாம். வீட்டில் சாதாரணமாய் நடமாட விட்டிருந்தார்களாம். ஒருவரும் கவனிக் காத சமயம் பார்த்து வீட்டை விட்டுக் கிளம்பி விட்டாளாம். பெரியண்ணன் என்கிற அவனுடைய வீட்டு வேலைக்காரன் அவளைத் தேடிக் கொண்டு கிளம்பி வந்து ரயில்வே ஸ்டேஷனில் அவள் ரயில் ஏறுகிற சமயத்தில் கண்டு பிடித்தானும். இரண்டு பேருமாக இந்த ஊருக்கு வந்தார்களாம். இங்கே சிங்க மேட்டுக் கவுண்டர் வீட்டுக்கு மெதுவாகத் தாஜா பண்ணி அவளை அழைத்துக்கொண்டு போனுனும் அந்தப் பெரியண்ணன். வீட்டின் கதவைத் தாழ்ப்பாள் போட்டுவிட்டு அந்த வீட்டிலேயே அவள் இராத்திரி இருக்கவேண்டும் என்று சொன்னதும்தான், கத்தியைஎடுத்து அவனைக் குத்தி விட்டாளாம்!'' (தொடரும்)

---




## சுவாமி விவேகானந்தர்

குமரி முனையில் விவேகானந்தரின் நினைவாக எழுப்பப்பட்ட ஆலயத் திறப்பு விழாவை முன்னிட்டு, முத்து நுண்கலை வெளியீட்டகத்தார் சுவாமி விவேகானந்தரின் வாழ்க்கைச் சரித்திரத்தை அழகிய முறையில் சின்னஞ் சிறு புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள். புத்தகத்தின் ஒரு பக்கம் விவேகானந்தரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பல வண்ணப் படங்களாகவும் மற்றொரு பக்கம் அன்னரின் வாழ்க்கையைச் சொல்லாகவும் அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள். எளிய நடை, சிறிய நூல், குறைந்த விலை - 60 காசுகள். குழந்தைகளுக்கான நூல் என்பதாலோ என்னவோ படங்களும் கொஞ்சம் குழந்தைத்தனமாகவே அமைந்திருக்கின்றன!

ஆசிரியர்: முத்து: ஓவியர்கள்: திரு ரவி, திரு சேவியர், திரு விஜய்.

பிரசுரம்: முத்து நுண்கலை வெளியீட்டகம்; சிவகாசி

## South Indian Inscriptions Volume XIX

இந்நூலில், பரகேசரி வர்மன் என்ற சிறப்புப் பெயரால் வழங்கப்பட்ட சோழ மன்னர்களின் நானூற்றுப் பதினேழு கல்வெட்டுக்கள் அடங்கியிருக்கின்றன. ராஜகேசரி வர்மனின் காலத்துக் கல்வெட்டுகளைப் போலவே இந்நூலில் காணப்படும் கல்வெட்டுக்களும் ஒன்பதாம் நூற்றாண்டின் (கி. பி.) இடைக்காலத்தைக் குறிப்பனவாகும்.

கல்வெட்டுக்களை ஆராய்ந்து வரலாற்றுத் துறையில் நூல்கள் தயாரிப்பதென்பது மிகவும் சிரம சாத்தியமான காரியம். அதற்கு நுண்ணிய அறிவும், ஆராய்ச்சித் திறனும், வரலாற்றுச் சான்றுகளில் ஆழமான புலமையும் பெற்றிருக்க வேண்டும். கல்வெட்டுத் துறையில் பல்லாண்டுகள் பணியாற்றி ஓய்வு பெற்ற ஸ்ரீ ஜி. வி. ஸ்ரீநிவாச ராவ் அவர்கள் இந்நூலைத் தயாரித்திருக்கிறார். இந்திய சர்க்கார் கல்வெட்டுத் துறை இலாகாவினர் இந்நூலை வெளியிடும் பொறுப்பை ஏற்றிருக்கின்றனர்.

கல்வெட்டுத்துறை ஆராய்ச்சி மாணவர்களுக்கும், வரலாறு பயிலும் மாணவர்களுக்கும் பெரிதும் பயன்படக் கூடியது இந் நூல். ஆசிரியர் ஸ்ரீ ஜி. வி. ஸ்ரீநிவாசராவ் அவர்களின் முயற்சி பெரிதும் பாராட்டுக்கு உரியது.

Publishers: The Manager of Publications; Delhi-8. Price: Rs. 58/- (Inland)

## ஸ்ரீவெங்கடேசுவரர்புராணச்சித்திரங்கள்

கலியுகத்தில் கண்கண்ட தெய்வம் என்று எல்லோராலும் போற்றிப் புகழப்படுபவர் திருப்பதி ஏழுமலையான். ஸ்ரீ வெங்கடேசுவரரின் புராண வரலாறு, ஸ்தல வரலாறு எல்லாருக்கும் தெரிந்திருக்கும் என்று சொல்லிவிட முடியாது. திருப்பதி மலைமீது எம்பெருமான் எப்படி இடம் கொண்டார் என்பது சுவையான கதைதான். அந்தக் கதையை வெறும் வார்த்தைகளால் படிப்பதை விடப் படங்களால் விளக்கம் பெறுவோமானால் அதுவும் அந்தப் படங்கள் பல வண்ணங்களில் உயிர்த் துடிப்புள்ள ஓவியங்களாகவும் இருந்து விட்டால் கேட்பானேன்? இந்த நல்ல முயற்சியைப் பொள்ளாச்சியைச் சேர்ந்த பயனீர் பப்ளிகேஷன்ஸ் ஸ்தாபனத்தார் செய்திருக்கின்றனர். திருப்பதி வெங்கடேசுவரரின் புராண மகிமையை இருபத்து நாலு பக்கங்களில் பல படங்களாக அழகாகத் தந்திருக்கிறார் ஓவியர் எஸ். கணேசன். அச்சுக் கலையில் நாம் எவ்வளவு முன்னேறி வருகிறோம் என்பதற்கு இப் புத்தகத்தின் அமைப்பும் வண்ணங்களும் சான்று கூறுகின்றன. படங்களுக்குக் கொடுத்துள்ள விளக்கம் மிகச் சிறிய எழுத்தாக இருப்பதாலும், அவை விளக்கப் படக் காட்சிகளின் மீது அச்சாகியிருப்பதாலும் படிப்பதற்கு ரொம்பவும் சிரமமாக இருக்கிறது. இக்குறையை அடுத்த பதிப்புகளிலும் வேறு மொழி வெளியீட்டிலும் தவிர்ப்பார்கள் என்று எதிர்பார்க்கிறோம். ஸ்ரீ வெங்கடேசுவரர் புராணச் சித்திரங்கள் என்று தமிழில் வெளிவந்துள்ள இப் புத்தகம் மற்ற தென்னக மொழிகளிலும் வெளிவர இருக்கிறதாம். நல்ல முயற்சி. நல்ல புத்தகம்

பதிப்பாசிரியர்: முல்லை தங்கராசன் - ஓவியர் எஸ். கணேசன், வெளியீட்டோர் - பயனீர் பப்ளிகேஷன்ஸ். 87, நேதாஜி ரோடு, பொள்ளாச்சி, விலை. ரூ. 2-00.





புஷ்பேஷு ஜாதி புருஷேஷு விஷ்ணு
நாரீஷு ரம்பா நகரேஷு காஞ்சி

# உள்ளொளி பெருக்கும் பள்ளி

என்ற கவி பாரவியிடம் இன்று, "அதெல்லாம் சரிதானய்யா, பள்ளிக்கூடங்களில் சிறந்தது எது? சொல்லும்!" என்று கேட்கக்கூடுமானல், "சந்தேகம் என்ன? காஞ்சி சோமசுந்தரக் கன்யா வித்யாலயம் தான்! அந்நாளில் இந்த வித்யாலயம் இருந்திருந்தால் நிச்சயம் இதையும் சேர்த்துப் பாடியிருப்பேன்" என்பார்.

அப்படியென்ன இந்தப் பள்ளிக்கூடத்தில் விசேஷம் என்றால் ஒரே வாக்கியத்தில் சொல்லி விடலாம், "அறிவு வளர்ச்சியுடன் ; இறையுணர்ச்சியையும் இங்குள்ள மாணவிகள் ; பெறுகின்றனர்" என்று.

இது உண்மையேயாயினும் இவ்விதம் சுருக்கமாகச் சொல்லிவிட்டால் அது அப்பள்ளிக்கு நியாயம் செய்ததாகாது. அதில் படிக்கும் மாணவிகளுக்கும் திருப்தி ஏற்படாது. ஆகவே, சற்று விரிவாகவே அதன் பெருமையைக் காண்போமே !

1964ல் "சஷ்டி அப்த பூர்த்தி" கொண்டாடிய இந்தப் பள்ளிக்கு இன்று வயது அறுபத்தேழு. சர் சி. பி. ராமஸ்வாமி அய்யரின் தாத்தாவான சோமசுந்தர சாஸ்திரி என்பவர் அந்நாளில் விசாலமான மனத்துடன் பெண்களுக்கும் கல்வி புகட்ட வேண்டியது அவசியம் என்று உணர்ந்தார். மனத்தால் வேறுபட்டு நின்றால் போதுமா? பெரும்பான்மையினரின் அபிப்பிராயத்தை எதிர்த்துக் காரியத்தில் இறங்க எத்தனை பேருக்குத் துணிச்சல் வருகிறது? சோமசுந்தர சாஸ்திரி, தாம் சி. பி.யின் தாத்தா என்பதை அன்றே நிரூபித்தார்! தைரியமாகப் பெண்களுக்கான பள்ளி ஆரம்பித்தது மட்டுமல்ல; பெண் கல்விக்காகவே எஞ்சியுள்ள தமது வாழ்நாளை அர்ப்பணம் செய்ய வேண்டும் என்று தீர்மானித்துப் பல வருஷங்கள் முன்னதாகவே உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்று வந்துவிட்டார்!

"சரியாப் போச்சு! பெண் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பறதாமே; கலி முத்திப் போச்சு!" என்று தொடக்கத்தில் பேசியவர்கள், ஒரு லட்சிய ஜோதியாகப் பெண்ணுக உருவாகவே இந்தப் பள்ளி ஒவ்வொரு மாணவிக்கும் உதவுகிறது என்பதைப் புரிந்து கொள்ள அதிக காலமாகவில்லை. தங்கள் வீட்டிலிருந்த சின்னஞ் சிறிசுகளைக் கொண்டு வந்து சேர்த்தார்கள். இன்று அந்த மாணவிகள் தங்கள் பேத்திகளைப் பள்ளியில் கொண்டு வந்து சேர்க்கிறார்கள்! மூன்று தலைமுறைகளாகக் காஞ்சிமாநகரில் பெண்





1. உள்ளொளி - பிரார்த்தனை.
2. அறிவொளி - விஞ்ஞானக் கூடம்.
3. உடலொளி - தேகப் பயிற்சி.
4. அருளொளி - காமாட்சி அம்மன் கோயில் கோபுரங்கள்.





1. மைதானத்தில் பள்ளி மாணவிகள் அனைவரும் ஒரு பொது நிகழ்ச்சியில் கலந்துகொள்ளக் கூடியுள்ளனர்.
2. நர்ஸரி வகுப்பில் குல்லாய்க்காரன் கதை பாடும் குழந்தைகள்.
3. சிறுமியின் பிரச்னையைப் பரிவோடு காதுகொடுத்துக் கேட்பவர் திரு ரகுராமன்.

கல்வியை மேலான குறிக்கோள்களோடு வளர்த்து வருகிறது, சோமசுந்தரக் கன்யா வித்யாலயம்.

இங்கு வாசிக்கும் பெண்ணுக்கு க்யூபெக்கில் பூமியைத் தோண்டினால் கிடைக்கும் கனிப் பொருள்கள் என்னென்ன என்பது ஒரு வேளை தெரியாமல் இருக்கலாம்; ஆனால் வரலட்சுமி விரதத்தின் தத்துவம் என்ன; எதற்காக, எப்படி விரதம் இருக்க வேண்டும் என்ற விவரங்கள் நன்ருகத் தெரியும்.

கணிதத்தில் கற்றுக் கொண்ட ஒரு சூத்திரத்தை இப்பள்ளியில் படிக்கும் ஒரு மாணவி மறந்து போய் விடலாம்; ஆனால் 'நாற்குணமும் நாற்படையாய்; ஐம்புலனும் நல்லமைச்சாய்..... பெண்மை அரசு ஆள வேண்டும்' என்ற புகழேந்தியின் பாடலை மறக்க மாட்டார்கள்; அதன்படி நடந்து கொள்ளவும் தவற மாட்டார்கள்.

அண்மையில் பி. ஏ. படித்து முடித்த ஒரு பெண்ணுக்குக் கல்யாணமாகி அவள் தன் மாமியாரைப் புக்ககத்துக்கு வந்து நமஸ்காரம் பண்ணினுள். ''நீ ஒரு காரியம் செய்ய வேண்டுமடி பெண்ணே. என் பிள்ளைக்கு எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் கேட்கலே. எப்படியாவது உன் கணவனைக் கொஞ்சம் ஆசார அநுஷ்டானங்களைக் கடைப்பிடிக்கும் படி செய், பார்க்கலாம்'' என்று வாஞ்சையும் ஆசையுமாகச் சொன்னாள் மாமியார்.

''அதற்கென்னம்மா; தினம் தவருமல் அவரைத் தர்ப்பணம் பண்ணச் சொல்கிறேன்!'' என்றுள் சுமங்கலியான தன் மாமியாரிடம் மாட்டுப் பெண். 'சந்தியாவந்தனம் பண்ணச் சொல்கிறேன்' என்பதை பி. ஏ. படித்த மாட்டுப் பெண் இப்படிக் கூறிவிட்டாள், தெரியாத்தனமாக என்று அந்த மாமியார் புரிந்து கொண்டாள். பாவம், அவள் ரொம்ப நல்ல மாதிரி. கோபித்துக் கொள்ளாமல் சிரித்துக் கொண்டே நாட்டுப் பெண்ணுக்குச் சொல்லிக் கொடுத்தாள்.

ஆனால் அதே பெண் சோமசுந்தரக் கன்யா வித்தியாலயத்தில் படித்திருந்தால் இப்படி அசட்டுத்தனமாகப் பேசியிருக்க மாட்டாள் என்பது சர்வ நிச்சயம். ஏனெனில் வெறும் ஏட்டுப் படிப்புடன் நில்லாமல் இந்த வித்தியாலயத்தில் வாழ்க்கைக்குத் தேவையான விஷயங்களில் கருத்துச் செலுத்தப்படுகிறது. நல்ல குடும்பப் பெண்ணாக, நல்ல மனைவியாக, நல்ல தாயாக விளங்கத் தேவையான அம்சங்களில் விசேஷ கவனம் செலுத்துகிருர்கள்.

மதச் சார்பின்மை என்ற பெயரில் நாஸ்திகமும் தாய்மொழிப் பற்று என்ற பெயரில் வடமொழி மீது வெறுப்பும் வளர்க்கப்பட்டு வரும் இந்நாளில், ''உள்ளொளி பெருக்குக'' என்ற வார்த்தைகளைக் குறிக்கோளாகக் கொண்டும் சம்ஸ்கிருதத்துக்கு உரிய மதிப்புக் கொடுத்தும் பாடப் புத்தகங்களைப் புரட்டும் மாணவிகள் அடங்கிய இது போன்ற ஒரு பள்ளி இருப்பது அதிசயம்தான்; அத்தியாவசியமும்தான்.

இப்படியெல்லாம் சொல்வதால் இப்பள்ளியில் படிப்பவர்கள் பழமைப் பித்தர்களாக





தமிழ்நாடு அரசாங்க உதவியுடன் ஸ்ரீ பார்த்தசாரதி ஸ்வாமி சபை அரங்கில் 19-6-71 அன்று நடைபெற்ற குமாரி ஜோதி ராமானுஜத்தின் பரதநாட்டிய அபிநய நிகழ்ச்சி கலை அன்பர்கள் ரசிக்கும் விதத்தில் நன்கு அமைந்திருந்தது. நல்ல நடன ஆசிரியரிடம் பயிற்சியும், பரதக் கலை வளர்ச்சிக்கு ஏற்ற குடும்பச் சூழ்நிலையும் அமையப்பெற்றவள் குமாரி ஜோதி. ஜோதியின் தாயாரே பரதநாட்டியத்தில் நல்ல தேர்ச்சியுடையவர். கலை நுட்பங்களை நன்கு உணர்ந்து அபிநயிக்கக் கூடியவர். ஜோதியின் நடனத்தில் முன் பாதியில் காம்போதி வர்ணமும் பிற்பகுதியில் கிருஷ்ணா கர்ணாமிர்த சுலோகமும் பரதநாட்டிய சிறப்புக்கும் அபிநய உயர்வுக்கும் எடுத்துக்காட்டாக விளங்கின. கலை சொட்டும் முகபாவங்கள் அபிநய அழகை உயர்த்திக் காட்டின.

---

இருப்பார்களோ, காலத்துக்கு ஏற்ப நடந்து கொள்ளத் தெரியாதவர்களாயிருப்பார்களோ என்று யாரும் அஞ்ச வேண்டாம். கோஷ்டியாக அமர்ந்து பஜனைப் பாடல்கள் பாடும் மாணவிகள், பெருந்திரளாக அணிவகுத்து நின்று ராணுவ பாணியில் தேகப் பயிற்சியும் செய்கிறார்கள். புஷ்பத்தை எடுத்து அர்ச்சிக்கும் நளினமான கரம், பியூரெட்டின் குழாயையும் நாசூக்காக இயக்குகிறது. ஆன்மீக விஷயங்களைப்பற்றிப் பேசுபவர்கள், அரசியல் சர்ச்சையிலும் ஈடுபடுகிறார்கள்.

தொட்டிலை ஆட்டும் கரங்கள்தாம் நாகரிக உலகை உருவாக்கப் போகிற கரங்கள் என்பதால் பழைமையான பண்பாட்டுச் சிறப்பில் தோய்ந்த நவீன நாரீமணிகளை சிருஷ்டிக்கிறது இப்பள்ளி.

தொடக்க காலம் முதல் இந்நாள் வரை இந்த லட்சியங்களை எத்தனை இன்னல்கள் ஏற்பட்ட போதிலும் விடாமல் பற்றிக் கொண்டு பள்ளியை நடத்தக் கூடிய ஆற்றல் வாய்ந்தவர்கள் இதன் நிர்வாகிகளாக அமைந்தது இப்பள்ளியின் பேரதிர்ஷ்டம்.

சோமசுந்தர சாஸ்திரிகளுடன் சேர்ந்து இப்பள்ளியைத் தொடங்கப் பக்கபலமாக நின்றவர் ராமநாத சர்மா. இருவருமே சி.பி.க்குத் தாய் வழித் தாத்தாக்கள். சர்மாவுக்கு வயது காரணமாய்க் கண் பார்வை மங்கிய போது பள்ளியைப் பொறுப்பாக யாரிடமாவது ஒப்படைக்க வேண்டுமே என்ற கவலை அவரை ஆட்கொண்டது. நல்ல வேளையாக அச்சமயம் டாக்டர் பி. ஆர். ரகுராமன் பேரில் இவர் பார்வை விழுந்தது.

டாக்டர் ரகுராமன் பூவிருந்தவல்லியைச் சேர்ந்தவர். சென்னையில் மருத்துவப் பள்ளியில் படித்து டிப்ளோமா வாங்கிய பிறகு ஒப்பந்தப்படி அரசினர் தமக்கு உத்தியோகம் தரக் காத்திருந்தார். அது சுலபத்தில் கிடைக்கிற வழியாய் இல்லை. ஆகவே ஒப்பந்தம் எக்கேடாவது கெட்டுப் போகட்டும் என்று இவர் சொந்தத்தில் வைத்தியத் தொழில் நடத்த ஆரம்பித்தார். நன்றாகச் சம்பாதிக்கத் தொடங்கிய கட்டத்தில் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்துக்கு ஒரு வைத்தியர் தேவை என்று கேள்விப்பட்டு உடனே வருவாயையெல்லாம் உதறிவிட்டுக் கிளம்பி விட்டார், ராஜாஜிக்குக் கீழ் பணி புரிய. சமூக சேவை, கிராம முன்னேற்றம், ஆன்மீக வளர்ச்சி இவற்றுக்கு உழைப்பதே அவரது இயல்பான குணங்களாயின. காந்தி ஆசிரமப் பணி முடிந்து காஞ்சிக்குத் திரும்பிய பின்னரும் இவருக்கு வைத்தியத் தொழில் ஓய்வுநேரத்தில் மட்டும் செய்யும் காரியமாகவே இருந்தது. பிரதான வேலைகள்: ஹரிஜனங்களுக்காக உழைப்பது, மதுவிலக்குப் பிரசாரம் செய்வது ஆகியன. ஹரிஜன சேரியில் இவர் பஜனை மண்டபம் கட்டத் துணிந்தார்! அவர்களுக்கெனத் தொழில் கல்வி பயிலும் கூடமும் அந்த மாணவர்கள் தங்குவதற்கென ஒரு விடுதியும் கட்டினார். கதர் நெசவு, கோழிப் பண்ணை வைப்பது, பட்டு நெசவு, தேனீ வளர்ப்பு, தச்சு வேலை, விவசாயம் முதலிய துறைகளில் ஹரிஜன மாணவர்களுக்குப் பயிற்சி அளித்து ஊக்கினார்.

தீண்டாமை நோய்க்கு இவ்விதம் மருந்து கண்டுபிடித்துக் குணப்படுத்தி வந்தார் இந்த டாக்டர்.

இப்படிப்பட்ட ஒரு தன்னலமற்ற தியாகியைக் காட்டிலும் சிறந்த நபர் தமது வித்தியாலயத்தைக் கவனித்துக் கொள்ள அகப்பட மாட்டார் என்று ராமநாத சர்மா முடிவுக்கு வந்ததில் வியப்பில்லை.

அவர் வைத்த நம்பிக்கையும் வீண் போகவில்லை. சோமசுந்தரக் கன்யா வித்யாலயம் படிப்படியாக வளர்ச்சியுற்று வந்திருக்கிறது. சென்ற பல ஆண்டுகளில். ரகுராமன் காரியதரிசியாக இயங்க, கட்டடங்களின் எண்ணிக்கையும் மாணவிகளின் தொகையும் இதர உபகரணங்களின் அளவும் உயர்ந்திருக்கின்றன. இவை பெருகப் பெருகக் கல்வித் தரம் குறைந்து போவதுண்டு, சில நிறுவனங்களில். ஆயின் இக்கல்விக்கூடத்தில் அந்தப் பேச்சுக்கே இடமில்லை என்பது குறித்துத் தலைமை ஆசிரியை குமாரி யசோதா பாயும் காரியதரிசி ஸ்ரீ ரகுராமனும் நியாயமான பெருமை கொள்ளலாம்.

டாக்டர் ரகுராமன் ரொம்ப ரொம்பக் கெட்டிக்காரர் என்று சாமான்யமாகச் சொல்லி விட்டால் போதாது. 'நீங்கள் செல்வந்தராக இருந்து, இந்தப் பள்ளிக்குப்

பத்தாயிரம் ரூபாய் நன்கொடை தருவீர்களேயானால் உண்மையில் அறுநூற்றி இருபத்தைந்து ரூபாய்தான் உங்கள் கையை விட்டுச் செலவழிக்கிறீர்கள்' என்று உங்களை நம்ப வைக்கும் அளவுக்கு இவர் கெட்டிக்காரர்! அப்படியானால் பாக்கித் தொகை? 'நீங்கள் வருமானவரி கட்டுவதற்குப் பதிலாக எங்களிடம் தருகிறீர்கள், அவ்வளவுதான்' என்று கணக்குப் போட்டுச் சொல்கிறார். இப்பள்ளிக்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டாகையால் வரி கட்டுவதற்குப் பதில் எங்களிடம் — ஒரு சத்காரியத்துக்கு நேரடியாகத் தாருங்களேன் என்கிறார். இப்போது புதிதாக மத்திய அமைச்சர் சாவனால் போடப்பட்டுள்ள வரிகள் இவர் கூற்றுக்கு மேலும் வலுவளிக்கவே செய்யும்.



புரூக்பாண்ட் ஸ்தாபனத்தினர் குறைந்த காலத்தில் தங்கள் 'ப்ரூ' இன்ஸ்டண்ட் காப்பியை ஒரு கோடி பாட்டில்கள் விற்பனை செய்து அந்தச் சாதனையை விழாவாகக் கொண்டாடினார்கள். இந்த விழாவில் சென்னை நகரமேயர் திரு சா. கணேசன், அந்த ஒருகோடி எண்ணிக்கையுள்ள 'ப்ரூ' ஜாடியைப் புரூக் பாண்ட் விற்பனை டைரக்டர் ஸ்ரீ டி. எஸ். நாகராஜனிடமிருந்து பெறுவதையும், அருகே சென்னை பிராந்திய விற்பனை மானேஜர் திரு சந்திரமௌளி அவர்கள் நிற்பதையும் காணலாம்.

சர் சி. பி.யின் தாயாருக்குக் காஞ்சிதான் சொந்த ஊர். அங்கு இவருக்கு இருந்த பெரிய கட்டடம் இப்போது பள்ளிக்குச் சொந்தமாகியிருக்கிறது. ஆயின் புராதனமான அதனைச் செப்பனிட வேண்டும்; எல்லா மாணவிகளும் ஒன்றாகச் சேர்ந்து அமரக் கூடிய அளவுக்கு விசாலமான பிரார்த்தனை மண்டபம் கட்டவேண்டும் என்றெல்லாம் திட்டமிட்டு ஆக்க பூர்வமாகக் காரியங்களைச் செய்து வருகிறார் ரகுராமன்.

டாக்டர் ரகுராமனின் ஒரே மகன் சில காலத்துக்குமுன் காலமாகி விட்டார். அந்தப் பெருந் துயரத்தைத் தாங்க இந்த வித்தியாலயமே அவருக்குத் துணை புரிந்தது. இதன் வளர்ச்சியிலேயே முழுக் கவனத்தையும் செலுத்திப் புத்திர சோகத்தை மறக்க முயலுகிறார். பள்ளியை ஒட்டி ஒரு கல்லூரி உருவாக வேண்டும் என்ற ஆர்வமும்கூட இவருக்கு இருக்கிறது.

என்னதான் இந்தப் பள்ளியின் பெருமைகளை நாம் எடுத்துரைத்தாலும் வசிஷ்டர் வாயால் பிரும்ம ரிஷி என்ற பட்டம் கிடைத்தால்தானே திருப்தி ஏற்படும்? ஆகவே, இப்பெண்கள் பள்ளிக்கு ஆய்வாளராக வந்த செல்லம்மாள் என்ன சொல்கிறார் பார்ப்போம்: ''...மொத்தத்தில் இப்பள்ளி எல்லாத் துறைகளிலும் பிரமாதமான முன்னேற்றம் கண்டிருக்கிறது. பொருளாதாரத்தைப் பொறுத்த வரை இதைவிடச் சிக்கனமாக நடத்தப்படும் பள்ளி கிடையாது. தேர்வு முடிவுகளைப் பொறுத்த வரை இதைவிடச் சிறந்த பள்ளி இல்லை. நாளுக்கு நாள் இது வளர்ந்து ராமராஜ்யத்தை இப்பள்ளியில் மட்டுமின்றி மாதர் சமூகம் முழுமைக்கும் கொண்டு வரட்டும்.''

உடைகள், ஒழுக்கம் போன்ற விஷயங்கள் குறித்து ஸ்ரீமதி செல்லம்மாள் தொடர்ந்து பின்வருமாறு எழுதுகிறார்: ''வற்புறுத்தல் இன்றியே மாணவிகள் தங்கள் மாணவத் தலைவிகளின் துணையுடன் விளையாட்டு மைதானத்திலும் வகுப்பறைகளிலும் ஒழுங்காக நடந்து கொள்கின்றனர். பெண் கல்வியின் எல்லா அம்சங்களும் கவனிக்கப்படுகின்றன. அறிவு வளர்ச்சி, கட்டுப்பாடு, உடல் ஆரோக்கியம், பொழுதுபோக்குக்கான அம்சங்கள் போன்ற எல்லாவற்றிலும் சிரத்தை காட்டப்படுகிறது. அன்றாட வாழ்க்கையின் தேவைகளையொட்டி விஞ்ஞானப் பாடங்கள் நடத்தப்படுகின்றன. தமிழ், ஹிந்தி, சம்ஸ்கிருதம் ஆகிய மொழிகளில் மாணவிகள் நன்கு தேர்ச்சி பெற மனப்பூர்வமான முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதில் துவேஷ மனப்பான்மையோ, கட்சி உணர்ச்சியோ தலைகாட்டுவதில்லை.''

பள்ளியில் ஒரு விழா நடந்தால் அதற்கு மந்திரிகளின் வாழ்த்துச் செய்திகளை வரவழைத்து விடலாம். தலைமை வகிப்பவரின் பாராட்டு மொழிகளைப் பெற்று விடலாம். ஆனால் பள்ளி ஆய்வாளரான ஒருவர்— குற்றம் குறைகளைச் சுட்டிக் காட்டிக் களைய வென்றே அமர்த்தப்பட்ட ஒருவர் — இவ்விதம் உள்ளம் பூரித்து எழுதுவதென்றால் இலேசான காரியமா?

இந்தப் பள்ளி நடக்கும் கட்டிடங்களுள் ஒன்றின் மொட்டை மாடியில் ஏறி நின்றால், பக்கத்தில் காமாட்சி கோயில் கோபுரங்கள் அனைத்தையும் ஒரே சமயத்தில் தரிசிக்கிறோம். வீதியில் இருந்தபடி காணக் கிடைக்காத அரிய காட்சி. அம்பாளின் அருளுடன் அம்பாளின் அம்சமான காஞ்சி ஆசாரியாளின் பரிபூர்ண அநுக்கிரகத்தையும் பெற்ற பள்ளி இது. இன்னும் என்ன சொல்ல இருக்கிறது?

**— குட்டிகிருஷ்ணன்**



"பழைமையான கரகரப்-
பான பற்பொடிகள்
உங்கள் ஈறுகளுக்கும்,
பற்களுக்கும் தீங்கு
இழைக்கக்கூடும்...!"

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களை-யும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும் போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய்நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய் நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் சுவையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

நவீன
பல் பராமரிப்பு முறைகளே **சிக்கனமாக**
இருக்கும்போது பழமையான
பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!

உங்கள் குடும்பத்திற்கு
எகானமி சைஸ் கால்கேட்
பற்பொடியை இன்றே வாங்குங்கள்!
ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்'




...பூரணமான பல் பரா
மரிப்பிற்கு விஞ்ஞான
முறையில்
உருவாக்கப்பட்ட
கால்கேட் டூத் ப்ரஷ்
உபயோகியுங்கள்.



# மனிதனும் மிருகமும்

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள் அருளுரை

மிருகங்கள் குறுக்குவாட்டில் வளர்கின்றன. மாறாக உயர்ந்து மேல்நோக்கி வளருகிற மனிதன் மற்ற பிராணிகளைக் காட்டிலும் அதிகமான சுகத்தை அநுபவிக்கலாம். ஆனால் துக்கத்தைத்தான் நாம் அதிகம் அனுபவிக்கிறோம். மிருகங்களுக்கு நம்மைப் போல் இத்தனை காமம், இத்தனை கவலை, இத்தனை துக்கம், இத்தனை அவமானம் இல்லை. பாவங்களைச் செய்து துக்கங்களைத்தான் நாம் அநுபவிக்கிறோம்.

ஒரு வழியில் பார்த்தால் மிருகங்களுக்குக் கொடுத்திருக்கும் சௌகரியங்களைச் சுவாமி நமக்குக் கொடுக்கவில்லை என்று தோன்றும். நம்மை யாராவது அடித்தால் திருப்பி அடிக்க ஓர் ஆயுதமும் நமக்கு இல்லை. மாட்டை அடித்தால் அதற்குக் கொம்பு கொடுத்திருக்கிறார். அதனால் திருப்பி முட்ட வருகிறது. புலிக்கு நகம் கொடுத்திருக்கிறார். நமக்குக் கொம்பு இல்லை; நகம் இல்லை. குளிரிலிருந்து காப்பாற்றிக் கொள்ள ஆட்டுக்கு உடம்பில் போர்வை வைத்திருக்கிறார். வேறு மிருகங்களுக்கும் போர்வை வைத்திருக்கிறார். மனிதன் ஒருவனைத்தான் வழித்து விட்டிருக்கிறார். யாராவது அடிக்க வந்தால் எதிர்க்க முடியவில்லை. ஓடலாம் என்றால் வேகமாக ஓட முடியாது. குதிரைக்கு ஓடுவதற்கு வேகம் கொடுத்திருக்கிறார். இருந்தாலும் ஸ்வாமி மனிதனுக்குத்தான் புத்தியை அதிகமாக வைத்திருக்கிறார்.

குளிரிலிருந்து காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால் மற்றப் பிராணிகளின் போர்வையை இவன் பறித்துக் கொண்டு விடுகிறான். வேகமாகப் போக வேண்டுமா? வண்டியிலே குதிரையைக் கட்டி அதன் வேகத்தை உபயோகப்படுத்திக் கொள்கிற சக்தியை இவனிடத்தில் ஸ்வாமி வைத்திருக்கிறார்.

மிருகம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிராந்தியத்தில்தான் இருக்கும். குளிர்ப் பிரதேசத்துக் கரடி நம் ஊரில் இருக்காது. இங்குள்ள யானை அங்கே வாராது. ஆனால் மனிதன் உலகம் முழுவதும் வாழ்கிறான். அங்கங்கே அவன் தன் புத்தியை உபயோகப்படுத்தித் தனக்குச் சாதகமாகச் சூழ்நிலையைச் செய்து கொள்வான் என்று இப்படிச் செய்திருக்கிறார்.

இந்த உயர்ந்த புத்தியை வைத்துக் கொண்டு மனிதன் கஷ்டப்படுகிறான்; துக்கப்படுகிறான். பிறந்து விட்டதனாலே இவ்வளவு கஷ்டம். இனிப் பிறக்காமலிருக்க வேண்டுமானால் என்ன பண்ணுவது? பிறப்புக்குக் காரணம் என்ன? நாம் ஏதோ தப்புப் பண்ணியிருக்கிறோம். அதற்குத் தண்டனையாக இத்தனை கசை அடி வாங்கவேண்டும் என்று விதித்திருப்பதால் இந்த உடம்பை எடுத்து அவற்றை வாங்குகிறோம். பத்து அடி ஆனபிறகு இந்த உடம்பு போய்விட்டால் இன்னோர் உடம்பு வருகிறது. பாக்கியை அந்த உடம்பு வாங்குகிறது. காமத்தினாலே, பாபத்தைச் செய்வதனாலே ஜனனம் வருகிறது. காரியம் எதுவும் பண்ணாமல் இருந்துவிட்டால் ஜனனம் இல்லை. கோபத்தினாலே பல பாபங்களைச் செய்கிறோம். கோபத்துக்குக் காரணம் ஆசை, காமம். முதலில் காமத்தை, ஆசையை ஒழிக்க வேண்டும். பற்றை நிறைய வளர்த்துக் கொண்டு காரியம் செய்யாமல் இருப்பது என்றால் முடியாது. பற்றை ஒழித்து விட்டால் பாவம் செய்யாமல் இருக்கலாம்.

ஆசைக்குக் காரணம் என்ன? நம்மைத் தவிர இன்னொன்று இருப்பதாக எண்ணுவதால் அதனிடம் ஆசை வருகிறது.

உண்மையில், சாந்தமாகிய ஒரே சிவமே எல்லாமாக இருக்கிறது.

ஒரு மாடு கண்ணாடியில் தன்னைப் பார்த்து விட்டு இன்னொரு மாடு இருப்பதாக நினைத்து அதை முட்டப் போகிறது. ஒரு மனிதன் தன் பிரதிபிம்பத்தைப் பார்க்கிறான். இன்னொரு மனிதன் இருக்கிறான் என்று அவன் நினைக்கிறானா? இரண்டும் ஒரே பொருள் என்பது அவனுக்குத் தெரிந்து சாந்தமாக இருக்கிறான். இப்படியாக நாம் பார்க்கின்ற அனைத்துமே ஒன்றுதான். இரண்டாவது என்று எண்ணினால் ஆசை வரும். ஆசை வருவதனால் கோபம் வருகிறது. கோபம் வருவதனால் பாபங்களைச் செய்கிறோம். அதனால் ஜன்மம் உண்டாகிறது. எல்லாம் ஒன்று என்ற ஞானம் நமக்கு வந்து விட்டால் வேறு பொருள் இல்லாததனாலே ஆசை இல்லை; கோபம் இல்லை; பாவம் இல்லை; காரியம் இல்லை; ஜனனம் இல்லை.



இந்த ஞானத்தை எப்படிப் பெறுவது? நம்மைப் பெற்ற அம்மா உடம்புக்குப் பால் கொடுப்பாள். அறிவுக்கு ஞானப் பால் கொடுப்பவள் அம்பாள்தான். ஞான சொரூபமே அவள்தான். அவளுடைய சரணாரவிந்தத்தைக் கெட்டியாகப் பற்றிக்கொண்டு அவளுடைய ஸ்வரூபத்தோடு நம்மை நாம் கரைத்தாலே ஞானம் வரும்; மனிதன் அப்போது தெய்வமாவான்.

போகுமிடமெல்லாம்
பொங்கிடும் அழகு
பொலிந்திட அணிவீர்...

# மபத்லால் சேலைகள்

மபத்லால் சேலைகள், சீராடும் பேரணி
சிந்தை குளிர்ந்திடும் பிரிண்ட்கள்;
விந்தை மிகுந்திடும் வண்ணங்கள்;
உன்னதமான காட்டன், 100%
போலியஸ்டர் மற்றும் கலவைத்
திருசுகள்!

---



ஸ்டாண்டர்ட், பம்பாய் • ஸ்டாண்டர்ட் (நியூ சினா),
பம்பாய் • ஸ்டாண்டர்ட், தேவாஸ் • மபத்லால் ஃபைன்,
கல்யாண்: யூனிட் நம்பர் 1 • மபத்லால் ஃபைன்
(வைலான்), பம்பாய்: யூனிட் நம்பர் 2
மபத்லால் ஃபைன் (நியூ யூனியன்), பம்பாய்:
யூனிட் நம்பர் 3 • நியூ ஷொராக், அகமதாபாத்
நியூ ஷொராக், நடியாத் • சூரத் காட்டன், சூரத்
மிஹிர் டெக்ஸ்டைல்ஸ், அகமதாபாத்

AIYARS-M-15l TM

# ரொட்டியும் சுடலாம்; காரோட்டியும் பழகலாம்!

ஐந்தாறு பெண்மணிகள் கூடினால், சுவாரஸ்யமான வம்புப் பேச்சு, நிறைவேறாத தீர்மானங்கள் எல்லாம் இருக்கும். பொழுது பயனற்றுக் கழியும் என்று நினைப்பது ஒரு வேளை உண்மையாக இருக்கலாம்; ஆனால், ஐம்பது அறுபது பெண்மணிகள் ஓரிடத்தில் கூடினால், கலைகள் வளரும். அவ்விடமே ஓர் கலைக்கூடமாகத் திகழும்! கூச்சல் இராது; மாதர் மென்குரல் பேச்சொலிதான் இருக்கும். நம்ப முடியாமல் வியக்கும் சகோதரிகள் மயிலை லஸ் சர்ச் சாலையில் உள்ள 34ம் இலக்கமுள்ள வீட்டுக்கு வந்து பாருங்கள்!

இந்தியன் பீனல் கோடும், கிரிமினல் கோடின் பிரிவுகளும் அலசி ஆராயப் பெற்ற இந்த வீட்டில் கோங்குரா சட்னி தயாரிக்கும் முறையும் விதம் விதமான கூந்தல் அலங்காரங்களும், ஐஸ்கிரீம் செய் முறையும் துணியில் 'பாடிக்' சித்திரம் தீட்டுவதும், பிஸ்கோத்து தயாரிக்க வெண்ணெயைவிட மார்ஜரைன் ஏன் உகந்தது என்பன போன்ற விஷயங்களும் காரண காரியங்களுடன் விளக்கப்படுவதைக் கேட்கலாம்; பார்க்கலாம். ஆம்; காலஞ்சென்ற பிரபல வழக்கறிஞர் திரு பாஷ்யம் அய்யங்காரின் வீடு இது. அன்னாரின் மனைவியார் மாதர் கலைப் பயிற்சி மன்றத்துக்குத் தமது வீட்டு மாடி முழுவதையும், வீட்டிலுள்ள தொலைபேசியின் உபயோகத்தையும் கூட இலவசமாக வழங்கியுள்ளார்.

இருபது வயதுக் கல்லூரி மாணவியிலிருந்து ஐம்பது வயதான இல்லத்தரசிகள் வரை பெண்டிர் பலர் இங்கு வந்து பல்வேறு கலைகள் பயிலுகின்றனர். காலை பதினோரு மணி முதல் ஒரு மணி வரையும் பிற்பகல் இரண்டு மணி முதல் மூன்றரை மணி வரையும் கலைப் பயிற்சி வகுப்புக்கள் நடைபெறுகின்றன. கணவரை அலுவலகத்துக்கும், குழந்தைகளைப் பள்ளிக்கும் கல்லூரிக்கும் அனுப்பி விட்டுப் பயிற்சிக்கு வர வசதியான நேரம். மாலையில் அவர்கள் திரும்பி வருவதற்குள் வகுப்பு முடிந்து வீடு திரும்பி விடலாம். பள்ளிக்கூடம் போகும் வயது வராத சிறு குழந்தைகள் இருந்தால் என்ன செய்வது என்று யோசிக்கிறீர்களா? அவர்களையும் கூடவே அழைத்துக் கொண்டு வந்து விடலாம். அவ்வளவு கெடுபிடி ஒன்றுமில்லை. குமாரி ஹேமா, ஸ்ரீமதி கீதா சுந்தரராஜன், குமாரி சுசீலா முதலான ஆறு ஆசிரியைகள் பயிற்சி அளிக்கிறார்கள். தவிர, 'மாணவி'யரும் பிறருக்குத் தெரியாத கலைகள் தங்களுக்குத் தெரிந்திருந்தால் அவற்றைக் கற்றுக் கொடுத்து மகிழ்கின்றனர். ஆசிரியைகள் யார், மாணவியர் யார், யார் என்று ஒவ்வொருவராக எனக்கு முதலிலேயே அறிமுகம் செய்து வைத்தார் குமாரி ஹேமா. இருந்தும், விடைபெறுகையில் யார் ஆசிரியை, யார் மாணவி என்று எனக்கு விளங்கவில்லை! அவ்வளவு சகஜமாகப் பழகுகின்றனர் அனைவருமே.

"ரொட்டி, பிஸ்கட், கேக் தயாரிக்க ஒரு மின் அடுப்பு வைத்திருக்கிறார்கள்." இது







படங்கள் :

1. பெண்மணிகளுக்கு உணவு தயாரிப்புப் பயிற்சி.
2. கூந்தல் அலங்காரம் நடக்கிறது.
3. கோடைக்குத் தாகம் தணிக்கக் குளிர்பானம் தயாராகிறது.

# சோபர்ஸ்ஸைப் போல் ஆடும் பெண்!

அதிசயப்படுங்கள். பெண்மணிகளும் கிரிக்கெட் வளர்ச்சிக்கு உறுதுணையா யிருந்திருக்கிறார்கள்! டபிள்யூ. ஜி. கிரேஸூம் அவரது சகோதரர்களும் கிரிக்கெட் ஆட்ட நுணுக்கங்களைத் தங்கள் அன்னையிடமிருந்துதான் கற்றுக் கொண்டார்கள். ஸ்ரீமதி பாஸ்டர் ஏழு புதல்வர்களுக்கும் கிரிக்கெட்டில் வழிகாட்டியாக இருந்தார். இங்கிலாந்து கிரிக்கெட் ஆட்டக்காரி எனிட் பேக்வெல் ஆயிரம் ரன்களுக்கு மேல் எடுத்து, நூறு விக்கெட்களை வீழ்த்தி ஆஸ்திரேலியா, நியூஸிலந்து நாடுகளில் நடைபெற்ற டெஸ்ட் பந்தயங்களில் பெரும் புகழ் பெற்றாள்.



ஸ்ரீமதி எனிட் பேக்வெல்லுக்கு இளம் வயதிலேயே கிரிக்கெட் ஆட்டத்தில் ஈடுபாடு மிருந்து ஒன்பதாவது வயதில் மற்ற ஆண் சிறுவர்களோடு விளையாடுவாள். "சிறுமியர் லெவேர் ஆட இருந்ததால் ஆண்களோடு கிரிக்கெட் ஆடினேன்!" என்று காரணம் கூறினாள் ஸ்ரீமதி பேக்வெல்.

எனிட்டின் பெற்றோருக்குக் கிரிக்கெட் ஆட்டத்தில் பயிற்சி இல்லாவிட்டாலும் அவளது ஆர்வத்துக்கு வித்திட்டு, பந்து, மட்டையெல்லாம் வாங்கிக் கொடுத்தார்கள். இன்று எனிட்டுக்கு மணமாகிவிட்டது. குழந்தையும் உண்டு. டெஸ்ட் பந்தயங்களின் போது பல சிரமமான 'காச்'களைப் பிடித்து பீல்டிங்கிலும் திறமையானவள் என்று காட்டியிருக்கிறாள் எனிட் பேக்வெல்.

"இந்த இங்கிலீஷ் பெண்மணி சோபர்ஸைப்போல் ஆடுகிறாள்!" என்று அடிலெய்ட் நகரப் பத்திரிகை புகழ் மாலை சூட்டியிருக்கிறது. இத்தனைக்கும் எனிட் ரொம்ப சங்கோச சுபாவம் படைத்தவளாம்! ஆதாரம்: விஸ்டன் 1970 தகவல்: குண்டுமணி

விலே அதிகம். சாதாரண 'ஸ்டவ்' சூட்டில் இவற்றைத் தயாரிக்க 45 ரூபாய்க்கு ஒரு சாதாரண அடுப்பு வாங்கி வைத்துக் கொண்டால் பயிற்சி பெற்றவர்கள் வீட்டிலேயே வேண்டியவற்றைச் செய்து கொள்ளலாம்" என்கிறார் இந்தக் கலையில் பயிற்சி அளிக்கும் குமாரி கசிலா.

"பிஸ்கட் தயாரிக்க எவ்வளவு நேரமாகும்?" என்று கேட்டதற்கு, "பதினைந்து நிமிடங்கள் போதும்!" என்று கூறிவிட்டு ஸ்ரீமதி கல்பனா ஜயராமனும் ஸ்ரீமதி சந்திரா சம்பத்தும் பிஸ்கட் தயாரிக்க ஆரம்பித்தனர்.

"இதோ, இந்தக் கூந்தல் அலங்காரத்தைப் பார்க்கிறீர்களா?" என்று கூறிய வண்ணம் ஸ்ரீமதி குமார், ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி இருவரும் ஐந்து நிமிடங்களில் ஒரு பெண்மணிக்கு மிக நேர்த்தியாகக் கொண்டை போட்டு முடிக்கிறார்கள்.

"இந்தப் பெண்ணுக்கு வட்டமான முகம். இந்தக் கொண்டைதான் எடுப்பாக இருக்கும்" என்று விளக்கமும் கூறுகின்றனர்.

அடுப்பைத் திறந்து 'கமகம' என்று மணக்கும் சூடான பிஸ்கோத்துகளை எடுத்து வழங்கிய ஸ்ரீமதி கீதா, "எதையும் நாமே தயாரித்துக்கொண்டால் மகிழ்ச்சி ஒருபுறமிருக்கச் சுத்தமாகவும் இருக்கிறது என்ற திருப்தி வேறு. செலவும் குறைவு. கடைகளிலோ வீதியிலோ ஐஸ்கிரீம் வாங்கினால், என்ன தண்ணீரை உபயோகப்படுத்தி யிருப்பார்களோ என்ற சந்தேகம் இருந்து கொண்டே இருக்கும் அல்லவா?" என்றார்.

கிச்சிலி, எலுமிச்சை, தக்காளி முதலிய பழங்களைச் சாறு பிழிந்து அவை கெடாமல் இருக்கத் தேவையான பொருட்களைச் சேர்த்துப் புட்டிகளில் அடைப்பது. பொம்மைகள் செய்தல், புடவைகளில் நமக்குப் பிடித்தமான சித்திரங்கள் 'டிசைன்'கள் ஆகியவற்றைத் தீட்டுதல் போன்ற பயனுள்ள கலைகளில் பயிற்சி அளிப்பது தவிர, வேறு யாருக்காவது பிஸ்கோத்து அல்லது பழச் சாறுகள் தேவையானால் அவற்றையும் தயாரித்துக் கொடுக்கிறார்கள்—குறைந்த செலவில். மாவும் சர்க்கரையும் எடுத்துக் கொண்டு போனால் பிஸ்கோத்துப் பொட்டலத்துடன் வீடு திரும்பலாம். சென்னையில் பிற பேட்டைகளில் உள்ள மாதர் சங்கங்களுக்கும் நேரில் சென்று இத்துறைகளில் பயிற்சி அளிக்கின்றனர். "ஒரே ஒரு நிபந்தனை. குறைந்தபட்சம் பத்துப் பேர்களாவது பயிற்சி பெற முன்வர வேண்டும்."

குமாரி ஜெயமாவிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார் திரைப்பட நடிகை குமாரி அம்பிகா. "நீங்கள் இங்கு பயிலும் கலை என்ன?" என்று கேட்டேன் குமாரி அம்பிகாவிடம்.

"கார் டிரைவிங்" என்று பதிலிறுத்தார் அவர். "கூடிய சீக்கிரம் தையல் கலை போதிக்கவும் ஏற்பாடு செய்யவிருக்கிறோம்" என்றார் ஆர்வம் உள்ள ஆசிரியை குமாரி கசிலா.

— ருக்மிணி பாலகிருஷ்ணன்

# பயங்கர மிருகங்களுடன் பதினாயிரம் இரவுகள்!



ஆந்திர மாநிலத்திலுள்ள மசூலிப்பட்டணத்தில் சுமார் முப்பத்தாறு வருஷங்களுக்கு முன்பு, மௌனப் படங்கள் ஓடிக் கொண்டிருந்தன. எல்லாமே ஆங்கிலப் படங்கள். அவற்றில் சில படங்கள் சர்க்கஸ் காட்சிகளையே பெரும் பகுதியில் கொண்டிருந்தன. வீர தீர பராக்கிரமச் செயல்களைப் படத்தில் பார்த்துப் பார்த்து ஒருவர் அதே போல் ஆக விரும்பினார். அந்தப்படியே வாழ்க்கையும் அமைந்து விட்டது!

இன்று — ஐம்பத்திரண்டு வயதை எட்டியிருக்கும் பி. டி. கேசவ ராவ், தம் மீசை மேல் கைபோட்டுச் சொல்கிறார்: "நான் எப்படி இருக்க ஆசைப் பட்டேனோ அதே மாதிரி இருக்கிறேன்!" தம் மீதுள்ள நம்பிக்கையை விடப் பன்மடங்கு தெய்வ நம்பிக்கை மிகுந்தவர்!

பாரத நாட்டின் சர்க்கஸ் அமைப்புக்களில் மிகப் பெரிய துணிக் கூடாரத்தையும் மிக அதிகமான விளையாட்டு வீரர்களையும் கொண்டது 'கிரேட் ஓரியண்டல் சர்க்கஸ்'. இன்று விஜயநகரத்தில் மக்களை மகிழ்விக்கும் இந்த சர்க்கஸில் வன விலங்குகளின் எண்ணிக்கையும் அதிகம். இந்த சர்க்கஸிலிருந்தே வேறு பல சர்க்கஸ்களுக்கு, சிங்கம், புலிக் குட்டிகள் விற்பனைக்குக் கொடுக்கப் படுகின்றனவாம்!

இந்த அமைப்பில் பார்வைக்குப் பசுவாகத் தெரியும் டி. கேசவ ராவ், பாயும் புலிகளை யெல்லாம் அடக்கி ஆளும் 'ரிங் மாஸ்டர்'ராகப் பணியாற்றுகிறார்.

"சர்க்கஸ் கூடாரத்தை எந்த வயதில் பார்த்தீர்கள்?"

"பதினேழு வயதில்... எங்கள் மசூலிப்பட்டணத்துக்கு வந்த கோட்டாரெட்டி சர்க்கஸில் சேர்ந்தேன்."

"மக்கள் முன்பு எப்படி அறிமுகமானீர்கள்?" — கேள்வி.

## ஆயிரத்தைக் கண்டவர்

"முதன் முதலாகக் கோமாளி வேடம் போட்டுக் கொண்டு மக்கள் கூட்டத்துக்கு எதிரே வந்தேன்! நான் சிரிப்பதைப் பார்த்து அவர்களும் சிரித்தார்கள்!..."

இளைஞன் கேசவ ராவ், அந்த சர்க்கஸில் படிப்படியாக முன்னேறினன். குதிரை சவாரி கற்றுக் குதிரைகள்மீது வித்தைகள் காட்டி வந்தான். அதன் பின்னர் 'நியூ ஒயிட்வே சர்க்கஸ்' உதயபூரில் முகாமிட்டிருந்த போது அதில் சேர்ந்தான். அங்கேதான் ஒரு பெரிய திருப்பம் — ரிங் மாஸ்டரானன்!

"'ஒயிட்வே சர்க்க'ஸில் சைக்கிளில் அநாயாசமான வேடிக்கைகள் காண்பித்துக் கொண்டு, ரிங் மாஸ்டராகவும் இருந்த பப்புதான் என் குரு. அவர் வன விலங்குகளை ஆட்டிப் படைக்க, இரும்புக் கிராதிக்குள் நுழையும்போது உதவியாளனாக நானும் நுழைந்தேன். புலிகளும் சிங்கங்களும் ஆரம்பத்தில் என்னை வெறித்து நோக்கியபோது, கொஞ்சம் நடுக்கமாகத்தான் இருந்தது. நாளடைவில் பழகி விட்டது. அங்கே ஏறக்குறைய இருபத்திரண்டு மிருகங்களுடன் பழகினேன். பப்புவினால்தான் நான் ரிங் மாஸ்டர் ஆனேன்!"

"உயிராபத்து எந்நேரமும் நிகழக் கூடிய பணி புரிகிறீர்களே, என்ன வருவாய் கிடைக்கிறது?"

"மாதம் ஆயிரம் ரூபாய் சம்பளம் தருகிறார்கள்."

ரேணிகுண்டாவில் மனைவியும், நான்கு பெண்களும் கொண்ட குடும்பத்துக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும்போது போய் வருகிறார். தாம் இல்லாதபோது சர்க்கஸ் நிகழ்ச்சிகளை நடத்த உதவியாளர்களையும் தயார் செய்துள்ளார்.

"வன விலங்குகளுடன் பழகும்போது தற்காப்புக்கு என்ன ஆயுதங்கள் வைத்துக் கொள்வீர்கள்?"



"சாட்டையைத் தவிர வேறு எதுவும் நான் எடுத்துச் செல்வதில்லை!..."

"மிருகங்கள் கட்டுப்பாட்டை மீறிவிட்டால்?..."

"பல முறை சிங்கப் புலிகளின் சீற்றத்துக்கு ஆளானேன்!... எல்லாம் ஸ்ரீ ராமரின் கருணையால் நல்லபடியாகிவிட்டது!..." குழந்தையைக் கண்டிப்பும் அன்பும் காட்டி வளர்ப்பது போல அந்தப் பயங்கர மிருகங்களுடன் பதினாயிரம் இரவுகளைக் கழித்துள்ள டி. கேசவ ராவ், "மனிதர்களைவிட மிருகங்கள் அப்படி ஒன்றும் ஆபத்தானவை அல்ல" என்கிறார்.!

பேட்டி: **ஏ. சுவாமிநாதன்**

## ஒரே சலவையில் 3 வழிகளில் செயல் புரிந்து...




# டெட் துணிகளை அதிவெண்மையாக்குகிறது

— மற்ற எந்த பவுடரையும்விட.

**இதோ, எப்படி என்று பாருங்கள்:**

1. **டெட்** டிலுள்ள தனிப்பட்ட சக்திவாய்ந்த பொருள் அதி விரைவாகத் துணியில் ஊடுருவிச் சென்று, மறைந்துள்ள அழுக்கைக்கூட நொடியில் விரட்டி அடிக்கிறது. துணிகள் வெண்மையாகின்றன.
2. **டெட்** அழுக்கை வெளிக்கொணர்ந்த பிறகு, அது மீண்டும் படியாமல் தடுக்கிறது. துணிகள் அதிக சுத்தமாகின்றன; சுத்தமாகவே நீடித்து இருக்கின்றன.
3. **டெட்** துணிகளை அதிவெண்மையாக்குகிறது. துணிகள் முன்னைவிட அதிவெண்மையுடன் பளிச்சிடுகின்றன. (நீலம் அல்லது வெண்மைச் சாதனம் சேர்க்கவேண்டிய அவசியமில்லை.)

**இன்றே டெட் வாங்குங்கள்!** ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், பம்பாய்.

SHILPI HPMA 38A/70 TAM

ஓவியம் என்பது பேசாத கவிதை; கவிதை என்பது பேசும் ஓவியம் — என்று அறிஞர் சைமனைடீஸ் சொன்னது எத்துணை உண்மை! ''முரசொலி'' நாளிதழில் துணையாசிரியராகப் பணியாற்றும் கவிஞர் முத்துலிங்கம், குயில் ஒன்றைக் கண்டார். உடனே கவிதை பேசுகிறது. அதற்கு முன் கவிஞர் பேசக் கேட்போம்:

''இராமநாதபுரம் மாவட்டத்தில் சிவகங்கைக்கு அருகே எட்டுக் கல் தொலைவில் கடம்பங்குடி என்ற கிராமம் உள்ளது. அதுதான் என் சொந்த ஊர். அங்கே மாடு மேய்க்கும் சிறுவர்களுடன் சேர்ந்து காட்டுக்குச் சென்றிருந்தேன். ஊருணிக் கரை யொன்றில் மாமரங்களும் வேப்ப மரங்களும் இருந்தன. அப்போது பங்குனி மாதம். சிறிது இளைப்பாறலாம் என்று மாமர நிழலில் அமர்ந்தேன்.

''மரத்திலிருந்த குயில், 'குக்குக்கூ' என்று ஓசை எழுப்பிக்கொண்டும் — நிறுத்திக் கொண்டும் இருந்தது. குயிலைப் பார்க்க நினைத்தேன்; இலைகள் அடர்த்தியாக இருந்ததால் குயில் என் கண்களுக்குத் தெரியவில்லை. அதனால் எனக்கொரு கற்பனை பிறந்தது.

''தன் கறுப்பு நிறத்தைக் கண்டால் யாரும் கேலி செய்வார்கள் என்றுதான் குயில் இலைகளுக்குள் மறைந்திருக்கிறதோ என்று நினைத்தேன். அப்போது என்னுள் கவிதை பிறந்தது.''

பங்குனியின் பாதியிலே
  பாட்டும் பாடப்
பழுக்கின்ற சிறுகுயிலே!
  நெருப்பு வட்டச்
செங்கதிரின் ஒளிநுழையா
  மரத்திற் குள்ளே
இருப்பாளை மணிபோலப்
  பாடும் புள்ளே!
தங்கநிற முகமுடைய
  பெண்க ளெல்லாம்
தம்முகத்தைத் திரைபோட்டு
  மறைப்பதைப் போல்
பொங்குமுன்றன் இசைகேட்க
  விரும்பி வந்தால்
பூவுடலை இலைகளுக்குள்
  மறைக்கின் றாயே!

என்று குயிலுடன் நெருக்கு நேர் பேசும் கவிஞர், 'நான் கூடக் கறுப்புத்தான்' என்று நகைச்சுவையாய்க் கூறுகிறார் :

உன்னுடல் கறுப்புத்தான்
  ஆதலாலே
உடலழகு இல்லையென்று
  மறைகின் றாயோ?
நன்றுநன்று நின்செய்கை!
  இதோஇ பார் பார்!
நான்கூடக் கறுப்புத்தான்!
  வானில் தொங்கும்
வண்ணமழை முகில்கூடக்
  கரு நிறந்தான்
வையத்தில் அஃதின்றேல்
  வாழ்க்கை யுண்டா?
இன்னுமென்ன நாணுகின்றாய்
  தயங்கு கின்றாய்?
இருங்குயிலே! உன்முகத்தைக்
  காட்டு பார்ப்போம்!

அறிஞர் அண்ணா அவர்கள் மறைந்து ஓராண்டான பிறகு அவர் கல்லறைக்குக் கவிஞர் சென்றிருந்தார். பூக்களை அள்ளிக் கல்லறையில் போட்டனர் பலர். பூக்கள் போடாமல் வெறும் கண்ணீருடன்



## ''குயிலே உன் முகத்தைக் காட்டு!''

உண்மையான பாசத்தோடு நின்றிருந்த பலருள் கவிஞரும் ஒருவர். ''அப்போது வாய் விட்டே துன்பியலோடு நான் சில கவிதைகள் பாடினேன்'' என்கிறார் கவிஞர். அவற்றுள் ஒன்று:

''பன்னீர் மலரெடுத்தால் பாதி
  யிலே வாடுமென்று
கண்ணீர் மலரெடுத்துக் காத்திருக்
  கோம் ஓராண்டாய்!
தண்ணீர்க் கடலோரம் தலைவரே
  படுத்துவிட்டான்
தண்ணீர்க் கடலோரம் தலைவன்
  படுத்ததனால்
கண்ணீரில் மாலை கட்டுவதோ!
  கொட்டுவதோ!''

சென்ற ஏப்ரல் மாதத்தில் ஒரு நாள், கவிஞர் காய்ச்சலில் படுத்த படுக்கையாக இருந்தார். கையில் மருந்து வாங்குவதற்குக்கூடப் பணமில்லாத நிலை. வெளியே சென்று யாரேனும் நண்பர்களைச் சந்தித்துப் பணம் வாங்கி வரலா மென்று நினைத்து எழுந்து நடந்தார்; ஆனால் சிறிது தூரம் சென்றதும் அதற்கு மேல் நடக்க முடியவில்லை. அப்போது கவிஞர் தம்முடன் வேலை பார்க்கும் பரசுராமன் என்பவரைச் சந்தித்தார். 'நல்ல வேளை! அவரிடம் கேட்கலாம்' என்று அவர் அருகே வந்ததும், விஷயத்தைச் சொல்லிப் பணம் கேட்டார் கவிஞர். ஆனால் அவரோ 'உன்னிடமிருந்தால் பணம் வாங்கிப் போகலாம் என்று வந்தேன்' என்று கூறினாராம்!

கவிஞரின் நெருங்கிய நண்பர் புலவர் சுரந்தை கணேசன் என்பவர் உபகார சிந்தை உள்ளவராம். அவருக்கு ஒரு கடிதம் கொடுக்கலாம் என்று நினைத்து, அதைக் கவிதைக் கடிதமாக எழுதி அதே பரசுராமன் மூலம் கொடுத்துப் பணம்



# கவிதை பிறந்த கதை

வாங்கி வரச் செய்தாராம். அப்போது எழுதிய சீட்டுக் கவி வருமாறு:

''ஏட்டோலை பலகற்ற இளங்
  கவிஞன் முத்துலிங்கம் இரக்கம்
    வேண்டி
சீட்டோலை விடுக்கின்றேன்
    தேகத்தின்
  பிணிதீரச் செய்வதற்கு
மாட்டாமல் பணமின்றி மனங்
  கவன்று தவிக்கின்றேன் மதிப்பு
    மிக்கோய்
வீட்டுக்குத் தெரியாமல் பணந்
  தந்தால் அக்கடனை விரைவில்
    தீர்ப்பேன்!''

பேட்டி: பி. வி. கிரி

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் 42

## மலையமான் துயரம்

சம்புவரையர் முன்கட்டுக்கு வந்ததும் கந்தமாறனைத் தனியாக அழைத்து, ''மகனே! நம் குலத்துக்கு என்றும் நேராத ஆபத்து இன்று நேர்ந்திருக்கிறது! அதிலிருந்து நாம் தப்ப வேண்டுமானால் நான் சொல்வதை உடனே நீ தடை சொல்லாமல் நிறைவேற்ற வேண்டும்'' என்று கூறினார்.

கரிகாலருடைய மரணம் கந்தமாறனைப் பெரிதும் கலங்கச் செய்திருந்தது. தான் வந்தியத்தேவனைக் கொல்ல நினைத்தது எவ்வளவு பெரிய தவறு என்பதையும் அவன் உணர்ந்திருந்தான். ''தந்தையே! மூடனாகிய என்னாலேதான் நம் குலத்துக்கு இந்த ஆபத்து நேர்ந்திருக்கிறது. அதற்காக என்னை மன்னியுங்கள். தாங்கள் என்ன கட்டளையிட்டாலும் அதை நிறைவேற்றி வைக்கிறேன்'' என்றான்.

''நீ உடனே ஒருவருக்கும் தெரியாமல் இந்த மாளிகையை விட்டு வெளியேற வேண்டும். நான் படுக்கும் அறையில், கட்டிலுக்கு அடியிலிருந்து சுரங்கப் பாதை ஒன்று போகிறது உனக்குத் தெரியும் அல்லவா? அது வேட்டை மண்டபத்திலிருந்து போகும் சுரங்கப் பாதையில் இம்மாளிகையின் மதில் சுவரண்டை போய்ச் சேருகிறது...''

'' தந்தையே! இந்த இக்கட்டான நிலைமையில் தங்களைத் தனியே விட்டுவிட்டு என்னைச் சுரங்க வழியில் தப்பித்துப் போகச் சொல்கிறீர்களா ?'' என்றான் கந்தமாறன்.

''பிள்ளாய்! அதற்குள் உன் வாக்குறுதியை மறந்து போகிறாயே? ஆம்; நீ போகத்தான் வேண்டும். கொல்லிமலைத் தலைவன் வல்வில் ஓரியின் வம்சத்துக்கு இப்போது நீ ஒருவன்தான் இருக்கிறாய். அவசியமாயிருந்தால், நீ அந்த மலைக்கே போய் மறைந்து வாழ வேண்டும். மதுராந்தகத் தேவருக்குப் பட்டங் கட்டுவது என்று நிச்சயமாகி, நான் உனக்குச் செய்தி அனுப்பிய பிறகு தான் திரும்பி வரவேண்டும்!'' என்றார் சம்புவரையர்.

''மன்னிக்க வேண்டும், தந்தையே! மறைந்து வாழ்வது என்னால் இயலாத காரியம். வல்வில் ஓரியின் குலத்துக்கு அத்தகைய கோழைமையைப் பெற்ற அபகீர்த்தி வேறு வரவேண்டுமா? இந்தக் கணமே என்னுடைய இன்னுயிரைக் கொடுக்கச் சொன்னீர்களானால் கொடுக்கிறேன். ஆனால் ஒளிந்து வாழ ஒருப்படேன்!'' என்றான் கந்தமாறன்.

சம்புவரையர் சிறிது யோசனைசெய்துவிட்டு, ''மகனே! உன்னைச் சோதனை செய்வதற்காகக் கூறினேன். ஒடித் தப்பித்துக் கொள்ளவும் மறைந்து வாழவும் நீ இஷ்டப்படவில்லை. நல்லது; உயிருக்கு ஆபத்து நேரக்கூடிய வீரச் செயலிலேதான் உன்னை நான் ஏவப் போகிறேன். சுரங்கப் பாதை வழியாக உடனே வெளியேறிச் செல்! ஆனால் கொல்லிமலைக்குப் போகவேண்டாம்! நேரே தஞ்சாவூருக்குப் போ! பெரிய பழுவேட்டரையர் அநேகமாக அங்கே இருக்கலாம். இருந்தால், அவரிடம் இங்கே நடந்ததைச் சொல்லு! அவர் இல்லாவிட்டால் சின்னப் பழுவேட்டரையரிடமும் மதுராந்தகத்தேவரிடமும் சொல்லு!....'' என்றார்.

''ஐயா! இங்கே என்ன நடந்தது என்று அவர்களிடம் சொல்லட்டும்?''

''இது என்ன கேள்வி? கரிகாலரின் மரணத்தைப் பற்றிச் சொல்லு! 'நாம் உத்தேசித்திருந்த காரியம் விதிவசத்தினால் வேறுவிதமாக நடந்து விட்டது! கரிகாலர் மாண்டுவிட்டார்! மதுராந்தகருக்குப் பட்டம் கட்ட இதுதான் தக்க

சமயம்' என்று அவர்களுக்குத் தெரியப்படுத்து! மலையமானும் கொடும்பாளூர் வேளானும் அதற்குக் குறுக்கே நிற்பார்கள். நமது பலத்தை யெல்லாம் உடனே திரட்டி அந்த இரண்டு பேரையும் அடியோடு அழித்துவிட வேண்டும் என்று கூறு!'' என்றார் சம்புவரையர்.

''கரிகாலர் எப்படி மரணமடைந்தார் என்று அவர்கள் கேட்டால் என்ன சொல்லட்டும்?'' என்றான் கந்தமாறன்.

''வேறு என்ன சொல்கிறது? வாணர் குலத்தைச் சேர்ந்த வந்தியத் தேவன் அவரைக் கொலை செய்து விட்டான் என்று கூறு! இன்னும் ஒரு முக்கியமான விஷயம். இதை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்! வந்தியத் தேவன் ஈழநாட்டுக்குப் போய்த் திரும்பி வந்திருக்கிறான். அங்கே அருள்மொழித் தேவனையும் பிறகு பழையாறையில் இளையபிராட்டியையும் பார்த்துவிட்டு வந்திருக்கிறான். அருள்மொழித் தேவன் நாகைப்பட்டினத்தில் மறைந்திருந்து இப்போது வெளிப்பட் டிருப்பதாக ஒரு செய்தி வந்திருக்கிறது. அருள்மொழித் தேவன் சிங்காதனம் ஏறும் ஆசையினால் அண்ணனைக் கொல்லுவதற்கு வந்தியத்தேவனை அனுப்பி வைத்தான் என்ற வதந்தியைச் சோழ நாட்டில் பரப்ப வேண்டும். பழையாறை இளையபிராட்டியும் இதற்கு உடந்தை என்ற சந்தேகத்தையும் உண்டுபண்ண வேண்டும்.



இதையெல்லாம் பழுவேட்டரையர்களிடமும் மதுராந்தகத் தேவரிடமும் சொல்லு!....''

''தந்தையே! தாங்கள் சொல்வதே உண்மையாகவும் இருக்கலாம் அல்லவா? சிநேகத் துரோகியான வந்தியத் தேவன் அத்தகைய பயங்கரமான எண்ணத்துடனேயே இந்த மாளிகைக்கு வந்திருக்கலாம் அல்லவா ?''

''இருக்கலாம், மகனே! ஆனால் பழுவூர் இளையராணி திடீரென்று மாயமாய் மறைந்து போனதற்குக் காரணம் கண்டு பிடிக்க வேண்டுமே? அவள் பேரிலும் அவளுக்கு உடந்தையாயிருந்த பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளின் பேரிலும் வல்லவரையன் வந்தியத்தேவன் குற்றம் சாட்டுகிறானே !....''

''குற்றம் செய்தவன் மற்றவர்கள் பேரில் அதைச் சுமத்தவே பார்ப்பான். இப்போது எனக்கு எல்லாம் விளங்குகிறது, தந்தையே ! பழுவூர் இளைய ராணியைப் பழையாறைக் குந்தவை தேவிக்கு எப்போதும் பிடிப்பதேயில்லை. கரிகாலரைக் கொன்று விட்டு அதே சமயத்தில் பழுவூர் இளைய ராணியை அபகரித்துக் கொண்டு போவதற்கும் அவள்தான் ஏற்பாடு செய்திருக்க வேண்டும். முதன்மந்திரி அநிருத்தரும் இதற்கு உடந்தைபோலிருக்கிறது. அதற்காகவே இந்த வந்தியத்தேவனை அவர்கள் அனுப்பியிருக்கிறார்கள்! ஐயோ! அவர்களுடைய சூழ்ச்சியை அறியாமல் மோசம் போய் விட்டோமே ?''

'' கந்தமாறா ! போனதைப் பற்றி வருந்துவதில் பயனில்லை. இனி மேல் நடக்க வேண்டியதைப் பார்க்க வேண்டும். நீ உடனே புறப்பட்டுச் செல்! கரிகாலரின் மரணச் செய்தி சுந்தரசோழருக்குப் போய்ச் சேருவதற்கு முன்னால், தஞ்சையில் வேறு யாருக்கும் தெரிவதற்கு முன்னால், பழுவேட்டரையர்களுக்கும் மதுராந்தகருக்கும் தெரிய வேண்டும். ஆகையால் நீ விரைந்து செல்! தஞ்சைக் கோட்டைக்குள் போவதற்கும் இரகசியச் சுரங்க வழி உண்டு என்பது உனக்குத் தெரியும் அல்லவா?....''

''தெரியும், தெரியும்.''

''அப்படியானால் உடனே புறப்படு!''

''புறப்படுகிறேன், தந்தையே! என் தங்கை—மணிமேகலை—அவளைப் பற்றித்தான் சிறிது கவலையா யிருக்கிறது.''

''வேண்டாம் உனக்கு அந்தக் கவலை! நம்மிடம் அவள் உளறியது போல் வேறு யாரிடமும் உளறுவதற்கு நான் விடமாட்டேன். அப்படி அவள் உளற முற்பட்டால், அவளை என் கையினாலேயே கொன்று விடுவேன்.....''

''ஐயோ! அதற்காகத்தான் கவலைப்படுகிறேன். தங்கள் கோபத்தை எண்ணித்தான் பயப்படுகிறேன்....''

''வேண்டாம்! அவளுடைய மனத்தை மாற்றும் வழி எனக்குத் தெரியும். ஆகா ! விதி விசித்திரமானதுதான் ! முதலில் அவளை நாம் மதுராந்தகத் தேவருக்கு மணம் செய்து கொடுப்பது என்று எண்ணினோம். இடையில் அந்த எண்ணத்தை மாற்றிக்கொண்டு கரிகாலருக்கு மணம் செய்து கொடுக்க உத்தேசித்தோம். கரிகாலர் இன்று பிணமாகக் கிடக்கிறார். நல்ல வேளை, மணிமேகலையின் உள்ளம் அவரிடம் செல்ல வில்லை. நமது பழைய உத்தேசத்தையே நிறைவேற்ற வேண்டியதுதான்....''

''ஆனால், தந்தையே! மணிமேகலையின் உள்ளம் இப்போது அந்தச் சண்டாளன் வந்தியத்தேவன் பேரில் அல்லவா போயிருப்பதாகத் தெரிகிறது?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை, மகனே! மணிமேகலைக்குத் தன் மனத்தைத் தான் அறியும் பிராயமே இன்னும் வரவில்லை. அவளை நான் கவனித்துக் கொள்கிறேன். நீ இனி ஒரு கணமும் இங்கே தாமதிக்க வேண்டாம் !''

அச்சமயம் மதிள்சுவர்களுக்கு வெளியில் வெகுசமீபத்தில் எழுந்த ஆரவாரத்தைக் கேட்ட கந்தமாறன், ''அப்பா! இது என்ன? மலையமான் படைகள் நெருங்கி வருவது போல் காண்கிறதே? மலையமானைத் தாங்கள் மாலையில் பார்த்தபோது அந்தக் கிழவன் என்ன சொன்னான் ?'' என்று கேட்டான்.

''நல்ல மங்களகரமான செய்தியைத்தான் சொன்னான். மணிமேகலையை ஆதித்த கரிகாலருக்கு மணம் செய்து கொடுக்கப் போகும் செய்தி அறிந்து அக்கிழவன் மிக்க மகிழ்ச்சியடைந்தானாம். அதே மணப் பந்தலில் அவனுடைய மகள் வயிற்றுப் பேத்தி ஒருத்தியையும் மணஞ் செய்து கொடுக்கலாம் என்று அழைத்து வந்திருக்கிறானாம்! அழகாயிருக்கிறதல்லவா? மாளிகைக்கு வரும்படி நான் அழைத்ததற்கு, நாளைப் பொழுது விடிந்ததும் நல்ல முகூர்த்தத்தில் வருவதாகச் சொல்லியிருக்கிறான். அவனுடைய வீரர்கள் இப்போதே வரப் போகும் இருமணத்தைக் கொண்டாடுகிறார்கள் போலிருக்கிறது!'' — இவ்விதம் கூறிவிட்டுச் சம்புவரையர் சிரிக்கப் பார்த்தார். ஆனால் சிரிப்பு அரைகுறையாக நின்று விட்டது.

''வா! வா! நானே உன்னைச் சுரங்கப் பாதையில் கொண்டு போய் விட்டு விட்டு வருகிறேன். வழியில் ஒரு விநாடி

யாவது நீ தாமதிக்கக் கூடாது. வழியில் எங்கேயாவது குதிரை சம்பாதித்துக் கொண்டு விரைந்து போக வேண்டும்!'' என்றார்.

சம்புவரையர் கையில் ஒரு தீபத்தை எடுத்துக் கொண்டார். இருவரும் சுரங்கப் பாதையில் புகுந்தார்கள். விரைவாக நடந்தார்கள். மாளிகையின் மதில் சுவரைக் கந்தமாறன் கடந்த பிறகு, சம்புவரையர் அவனைக் கட்டித் தழுவி ஆசி கூறிவிட்டுத் திரும்பினார். ''விளக்கு வேண்டுமா?'' என்று கேட்டதற்குக் கந்தமாறன், ''வேண்டாம், அப்பா! எனக்கு இந்த வழி நன்றாய்த் தெரிந்தது தானே? கண்ணைக் கட்டி விட்டாலும் போய் விடுவேன்!'' என்றான்.

அவன் சுரங்கப் பாதையில் கண்ணுக்கு மறைந்த பிறகு சம்புவரையர் திரும்பினார். வழியில் வேட்டை மண்டபத்துக்குள் புகுந்தார். அடுத்த அறையில் ஏதாவது சத்தம் கேட்கிறதா என்று காது கொடுத்துக் கேட்டார். ஒன்றும் கேட்கவில்லை. சில கண நேரம் தயங்கி நின்றார். பிறகு, ஒரு முடிவான தீர்மானத்துக்கு வந்தவர் போல், பெருமூச்சு விட்டார். விளக்கை நன்றாகத் தூண்டி, வைக்க வேண்டிய இடத்தில் வைத்து விட்டு விரைந்து திரும்பிச் சென்றார்.

திரும்பச் சம்புவரையர் முன்கட்டுக்குச் சென்றதும், அந்தப்புரத்துப் பெண்களையெல்லாம் ஒன்று சேர்த்தார்.

அவர்கள் எல்லோரும் ஏற்கனவே கலங்கிப் போயிருந்தார்கள். கண்ணீரும் கம்பலையுமாகக் கந்தமாறனால் அந்தப்புரத்தில் கொண்டு வந்து தள்ளப்பட்ட மணிமேகலையைக் கேட்டு அவர்கள் ஒருவாறு கரிகாலன் மரணத்தைப் பற்றித் தெரிந்து கொண்டிருந்தார்கள்.

''பெண்களே! நம் குலத்துக்கு என்றுமில்லாத பெரும் விபத்து ஏற்பட்டுவிட்டது. எந்த நிமிஷத்திலும் நீங்கள் இந்த மாளிகையை விட்டுப் புறப்படச் சித்தமாயிருக்க வேண்டும். பல தினங்கள் காட்டிலும் மலையிலும் காலம் கழிக்கவும் துணிவு பெற வேண்டும். எல்லாரும் அவரவர்களுடைய ஆடை ஆபரணங்களை எடுத்துக் கொண்டு நிலா முற்றத்துக்கு வந்து சேருங்கள். அழுகைச் சத்தமோ, புலம்பல் சத்தமோ 'மூணுக்' என்று கூடக் கேட்கக் கூடாது! தெரியுமா?'' என்று எச்சரித்தார்.

பின்னர் சம்புவரையர் மாளிகையின் முன் வாசற் பக்கம் வந்தார். முன் வாசல் கோபுரத்தின் மேல் ஏறி வெளியிலே என்ன அவ்வளவு ஆரவாரம் என்று தெரிந்து கொள்ள விரும்பினார். அதற்கு அவகாசம் கிடைக்கவில்லை. ஏனெனில் அவர் முன் வாசலை நெருங்கும்போதே வெளியிலிருந்து வீரர்கள் கோட்டை வாசற் கதவுகளைத் தகர்த்துத் தள்ளிவிட்டு உள்ளே தடதடவென்று புகுந்து கொண்டிருந்தார்கள். வாசற் காவலர்கள் அவர்களைத் தடுக்க முயன்று முடியாமல் கீழே விழுந்து கொண்டிருந்தார்கள்.

இதுவுமல்லாமல் கோட்டை மதில் சுவர் மீது ஏறிக் குதித்தும் வீரர்கள் உள்ளே புகுந்து கொண்டிருந்தார்கள்.

சம்புவரையரின் உள்ளத்தில் பெரும் பீதியும் கலக்கமும் ஏற்பட்டன. கரிகாலன் கொலையுண்ட செய்தி ஒருவேளை மலையமானுக்குத் தெரிந்து விட்டதா, என்ன? இதற்குள் எவ்விதம் தெரிந்திருக்கும்? — தெரிந்தால் தெரியட்டும். எப்படியும் தெரிந்துதானே தீரவேண்டும்? ஆனால் இன்னும் சிறிது நேரத்துக்கு இவர்களை இங்கேயே நிறுத்தித் தாமதப்படுத்தி வைக்க வேண்டும். அரை நாழிகை நேரம் தாமதித்தால் போதுமானது. அதற்குள் தாம் உத்தேசித்த காரியம் நிறைவேறி விடும்...

கோட்டை வாசலுக்கும் மாளிகை முகப்புக்கும் நடுவில் இருந்த நிலா முற்றத்தின் நடுவில் சென்று சம்புவரையர் கம்பீரமாக நின்றார். அவர் கையிலே கூரிய வாள் மின்னியது. அவருக்குப் பின்னால் ஏழெட்டு வீரர்கள் நெடிய வேல்களைப் பிடித்துக் கொண்டு நின்றார்கள். அவர்களில் சிலர் கையில் தீவர்த்தி வெளிச்சம் வைத்துக் கொண்டிருந்தார்கள்.

வாசற் கதவுகளை உடைத்துத் தகர்த்துக்கொண்டு முன்னால் வந்த வீரர்களைத் தொடர்ந்து திருக்கோவலூர் மலையமானும் பார்த்திபேந்திரனும் வந்தார்கள்.

நிலா முற்றத்தின் நடுவில் நின்ற சம்புவரையரைப் பார்த்து விட்டுப் பார்த்திபேந்திரன் மலையமானுக்கு அவரைச் சுட்டிக் காட்டினான். இருவரும் சம்புவரையரை நோக்கி வந்தார்கள்.

அருகில் வரும்போதே மலையமான், "சம்புவரையரே! இது என்ன நான் கேள்விப்படுவது? அத்தகைய பாதகத்தையும் செய்வீரா? ஓகோ! இது என்ன? கையில் வாளுடன் நிற்கிறீரே? உமது உத்தேசம் என்ன?" என்று கேட்டுக் கொண்டே வந்தார்.

"அந்தக் கேள்வியை உங்களிடம் கேட்கத்தான் நிற்கிறேன். உங்கள் உத்தேசம்தான் என்ன? வாசற் கதவைத் தகர்த்துக் கொண்டு வந்ததின் நோக்கம் என்ன? சற்று முன்னால் நான் வந்து தங்களை அழைத்தேன். நாளைக்கு நல்ல வேளை பார்த்துக் கொண்டு வருவதாகச் சொன்னீர்கள்..."

"சம்புவரையரே! நல்லவேளை இப்போதே வந்து விட்டது. அதனாலேதான் வந்தேன். ஆதித்த கரிகாலன் எங்கே? வீரபாண்டியன் தலைகொண்ட வீராதி வீரன் எங்கே? சேவூர்ப் போர்க்களத்தின் வெற்றி வீரன் எங்கே? என் பேரன் எங்கே?" என்று மலையமான் கேட்டார்.

"என்னைக் கேட்டால் எனக்கு என்ன தெரியும்? இளவரசருக்கு இஷ்டப்பட்ட இடத்தில் அவர் இருப்பார். அந்த முரட்டுப் பிள்ளையிடம் நான் எவ்விதப் பேச்சுவார்த்தையும் வைத்துக்கொள்வதில்லை யென்றுதான் முன்னமே தங்களிடம் சொன்னேனே? பார்த்திபேந்திரனுக்கும் அது தெரிந்த செய்திதான்!"

"அடே சம்புவரையா! இவ்வாறு வீண் சாக்குப் போக்குச் சொல்லி ஏமாற்றப் பார்க்காதே! ஆதித்த கரிகாலனை உடனே கொண்டு வந்து எங்களிடம் ஒப்புவித்துவிடு! இல்லாவிட்டால் உன்னுடைய இந்தக் கோட்டை கொத்தளம் மாளிகை எல்லாவற்றையும் இடித்துத் தகர்த்து மண்ணோடு மண்ணாக்கி விடுவேன்!" என்று திருக்கோவலூர் மலையமான் கர்ஜித்தார்.

"பார்த்திபேந்திரா! இந்தக் கிழவன் என்ன பிதற்றுகிறான்? இவனுக்குத் திடீரென்று பைத்தியம் பிடித்து விட்டதா? இளவரசரைக் கொண்டு வந்து இவனிடம் ஒப்புவிப்பதற்கு நான் யார்? இவன்தான் யார்? இளவரசரை நான் சிறைப்படுத்தி வைத்திருக்கிறேனா? அல்லது இவன் இளவரசரைச் சிறைப்பிடித்துக் கொண்டு போகப் போகிறானா?" என்றார் சம்புவரையர்.

பார்த்திபேந்திரன் சிறிது சாந்தமான குரலில், "சம்புவரையரே! பதற வேண்டாம்! கிழவருக்குக் கோபம் வரக் காரணம் இருக்கிறது. இதோ இந்த ஓலையைப் பாருங்கள். தாங்களே தெரிந்து கொள்வீர்கள்!" என்று கூறிச் சிறிய ஓலைத்துண்டு ஒன்றைச் சம்புவரையரின் கையில் கொடுத்தான்.

அவர் அதைப் பின்னால் பிடிக்கப்பட்ட தீவர்த்தியின் வெளிச்சத்தில் நன்றாக உற்றுப் பார்த்தார்.

"இளவரசர் ஆதித்த கரிகாலரின் உயிருக்கு ஆபத்து. உடனே படைகளுடன் வந்து காப்பாற்றவும்" என்று அந்த ஓலையில் எழுதியிருந்தது.

அதைப் படிக்கும்போதே சம்புவரையர் முகமெல்லாம் வியர்த்தது. முன்னர் கரிகாலனுடைய சடலத்தைக் கண்டதும் அவருடைய உடல் நடுங்கியது போல் இப்போதும் ஆடி நடுங்கியது.

"இது என்ன சூழ்ச்சி! இது என்ன சதி? யார் இப்படி ஓலை எழுதியிருக்க முடியும்?" என்று தடுமாறினார்.

"ஓலை யார் எழுதினால் என்ன? ஆதித்த கரிகாலரை உடனே இவ்விடம் அழைத்து வா! அல்லது அவர் இருக்கும் இடத்துக்கு எங்களை அழைத்துப் போ! இல்லாவிட்டால் என் வீரர்களை விட்டுத் தேடச் சொல்லட்டுமா?" என்று கேட்டார் மலையமான்.

"ஆகட்டும் ஐயா! கரிகாலர் இருக்குமிடத்துக்கு உங்களை அழைத்துப் போகிறேன். பார்த்திபேந்திரா! உனக்கு அந்த இடம் தெரியும். பழுவூர் இளைய ராணியின் அந்தப்புரத்துக்குப் போயிருக்கிறார் என்று சற்று முன் அறிந்தேன். அங்கே இவரை நீ அழைத்துப் போ!" என்றார் சம்புவரையர்.

பார்த்திபேந்திரன், "ஆம் தாத்தா! வாருங்கள்! நானே உங்களை அழைத்துப் போகிறேன்!" என்றான்.

இப்படிச் சொல்லிவிட்டுப் பார்த்திபேந்திரன் பழுவூர் இளையராணி நந்தினி தங்கியிருந்த அந்தப்புரம் இருந்த திக்கை நோக்கினான்.

''ஐயோ! இது என்ன?'' என்று அலறினான். ஏனெனில், அவன் பார்த்த திக்கில் அப்போது தீ கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது. தீயின் கொழுந்துகளுக்கு மேலே கரிய புகை மண்டலம் அடர்ந்திருந்தது.

அவன் பார்த்த திசையை எல்லாரும் பார்த்தார்கள். ''தீ! தீ!'' என்ற பீதி நிறைந்த ஒலி எல்லோருடைய கண்டங்களிலிருந்தும் கிளம்பியது.

பார்த்திபேந்திரன் சிறிது திகைப்பு நீங்கியவனாய், ''சம்புவரையரே! முதலில் இந்த ஓலையை நான் நம்பவில்லை. இப்போது நம்புகிறேன். ஏதோ சூழ்ச்சியும் சதியும் நடந்திருக்கின்றன.— பாட்டா! இந்தச் சதிகாரர்களை உடனே சிறைப்படுத்தச் சொல்லுங்கள். நான் போய் இளவரசர் இருக்குமிடத்தைப் பார்த்துத் தேடி அழைத்து வருகிறேன்!'' என்று சொன்னான்.

சம்புவரையர் மறுபடியும் பழைய தைரியமான குரலில், ''ஆமாம், பார்த்திபேந்திரா! சூழ்ச்சியும் சதியும் நடந்திருக்கின்றன. ஆனால் செய்தவர்கள் நீங்கள். என் அரண்மனையின் கதவைத் தகர்த்துக் கொண்டு புகுந்தீர்கள். உங்கள் வீரர்களை ஏவிவிட்டுத் தீவைக்கும்படி சொல்லியிருக்கிறீர்கள். இளவரசருக்கு ஏதேனும் ஆபத்து என்றால், அதுவும் உங்களாலேதான் நேர்ந்திருக்க வேண்டும்! ஜாக்கிரதை! இதற்கெல்லாம் பழிக்குப் பழி வாங்கும் காலம் வரும்!'' என்றார்.

பார்த்திபேந்திரன் அவருடைய வார்த்தைகளைப் பொருட்படுத்தாமல் ஓடினான்.

அதே சமயத்தில் சம்புவரையர் வீட்டுப் பெண்கள் கும்பலாக மாளிகைக்குள்ளே இருந்து நிலா முற்றத்துக்கு வந்தார்கள். அவர்களுடைய மனக் கலக்கத்தை அவர்கள் முக பாவங்கள் வெளிப்படுத்தின. ஆனால் யாருடைய குரலிலிருந்தும் ஒரு சிறு முனகலாவது விம்மலாவது கேட்கவில்லை.

அவர்களில் சிலருடைய கவனம் மாளிகையின் பின்புறத்தில் வெளிச்சமாகத் தெரிந்த இடத்துக்குச் சென்றது. ஒருவரையொருவர் கூட்டி அழைத்துக் கொழுந்து விட்டெரிந்த தீக்கடலைக் காட்டினார்கள். மணிமேகலையும் அதைப் பார்த்தாள். உடனே, ''ஐயோ! தீ! தீ! அவர் அங்கு இருக்கிறாரே!'' என்று அலறிக்கொண்டு அந்தத் திக்கை நோக்கி ஓடத் தொடங்கினாள். சம்புவரையர் குறுக்கிட்டு அவளை நிறுத்தினார். அவளுடைய முகத்தில் பளார் என்று ஓர் அறை கொடுத்தார். பிறந்ததுமுதல் யாரும் இப்படித் தன்னை நடத்தி அறியாதவளான மணிமேகலை, — சம்புவரையரின் கண்ணுக்குக் கண்ணான செல்லப் பெண் மணிமேகலை, — தந்தையை வெறித்து நோக்கிய வண்ணம் ஸ்தம்பித்து நின்றாள்.

சம்புவரையர் சிறிது இரங்கிய குரலில், ''அசட்டுப் பெண்ணே! உனக்குத்தான் முன்னமே நான் எச்சரிக்கை செய்திருந்தேனே? ஏன் எனக்குக் கோபம் வரச் செய்கிறாய்?'' என்று கூறிவிட்டு, ''அதோ பார்! நீ அலறி அடித்துக்கொண்டு ஓட வேண்டிய அவசியம் இல்லை என்பதைத் தெரிந்து கொள்!'' என்றார்.

சம்புவரையர் சுட்டிக் காட்டிய திசையிலிருந்து வந்தியத்தேவன் தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்து கொண்டிருந்தான். அவனுடைய தோளின் பேரில் ஆதித்த கரிகாலரின் உயிரற்ற உடலைச் சாத்தி எடுத்துக் கொண்டு வந்தான்.

சம்புவரையருக்கும் அவருடைய மகனுக்கும் நடந்த விவாதத்தில் கவனம்

எழுதும்

# புதிய தொடர்கதை



விட்டமின்கள் மற்றும்
தாதுப் பொருட்களுக்கான
'உணர முடியாப் பசி' உங்களுக்கு
சோர்வும் எரிச்சலும் ஊட்டுகிறது...

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்

## மட்டுமே 12 இன்றியமையாத சத்துக்களை அளிக்கிறது அந்த 'உணர முடியாப் பசி'யைத் தீர்ப்பதற்கு






உங்களை
ஆரோக்கியமும்
சக்தியும்
ததும்ப
வைத்திருப்பது

உங்கள் உடலில் விட்டமின்கள், தாதுக்கள் மற்றும் முக்கிய சத்துக்களுக்கான பசி நிரந்தரமாக இருக்கிறது என்பதை எந்த டாக்டரும் கூறுவார். இந்த 'உணர முடியாப் பசி'யின் விளைவு— சோர்வு, எரிச்சல், இருப்புக் கொள்ளாமை, பசியின்மை, ஜீரண சக்தி குறைவு.

எல்லா சத்துக்களும் அடங்கிய வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் சாப்பிட்டு 'உணர முடியாப் பசி'யைப் போக்குங்கள். அதில் 12 முக்கிய சத்துக்கள் உள்ளன: வளர்ச்சிக்கும், வலிமைக்கும் விட்டமின்கள்; இரத்த விருத்திக்கு இரும்புச் சத்து; நல்ல பசியெடுக்க எல்லாப் பொருட்களும்; நரம்புகளுக்கு உரமூட்ட ஃபாஸ்ஃபேட்டுகள்.

சிந்தித்துப் பாருங்கள்; உங்களுக்கு அல்லது உங்கள் குடும்பத்தில் யாரேனும் ஒருவருக்கு வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் தேவை இன்றே!

இரண்டு அளவுகளில் கிடைக்கிறது:
250 ml 470 ml.

ஒரு [illegible] வார்னர் லாம்பர்ட் தயாரிப்பு

WVT-C-7 TM

செலுத்திய மலையமானும் இப்போது வந்தியத்தேவனை நோக்கினார். அவன் மெள்ள மெள்ளத் தள்ளாடி வருவதை யும், அவனுடைய தோளில் யாரையோ தூக்கிக் கொண்டு வருவதையும் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றார். ஏனோ அவருடைய முதுமைப் பிராயம் அடைந்த உடம்பு நடுங்கியது. உள்ளத்தில் ஒருவிதத் திகில் உண்டா யிற்று. கிட்ட நெருங்கி வந்தவனைப் பார்த்து ஏதோ கேட்க விரும்பினார். ஆனால் நா எழவில்லை; தொண்டை அடி யோடு அடைத்துக் கொண்டு விட்டது.

வந்தியத் தேவன் மலையமானைப் பார்த்துக் கொண்டே அவர் அருகில் வந்தான்.

''ஐயா! இதோ இளவரசர் கரிகாலர். வீரபாண்டியன் தலை கொண்ட இந்த வீராதி வீரரை உயிரோடு தங்களிடம் கொண்டுசேர்க்க என்னால் இயலவில்லை. உடலை மட்டும் தீக்கிரையாகாமல் கொண்டு சேர்த்தேன். விதியினாலும் சதியினாலும் கொல்லப்பட்ட உங்கள் பேரப் பிள்ளையை இனி நீங்கள் ஒப்புக் கொள்ளுங்கள்!'' என்று கூறிவிட்டு வந் தியத்தேவன் இளவரசர் கரிகாலரின் சடலத்தை மெதுவாகக் கீழே இறக்கிப் படுக்க வைத்தான்.

உடனே தடால் என்று தானும் கீழே விழுந்து நினைவிழந்தான்.

கிழவர் மலையமான் இளவரசரின் உடலுக்கு அருகில் உட்கார்ந்தார். அவருடைய வீரத் திருமுகத்தைச் சற்று நேரம் உற்று நோக்கினார். திடீரென்று மலை குலுங்குவது போல் அவருடைய உடம்பெல்லாம் குலுங்கி அசைந்தது! அலைகடலின் பேராரவாரத்தைப் போல் அவருடைய தொண்டையி லிருந்து ''ஐயோ!'' என்ற சோகக் குரல் வந்தது.

தம் இரும்பை யொத்த முதிய கை களினால் தலையிலும் மார்பிலும் மாற்றி மாற்றி அடித்துக் கொண்டார்.

''என் செல்வமே! உன்னை மணக் கோலத்தில் பார்க்க வந்தேனே! பிணக் கோலத்தில் பார்க்கிறேனே!'' என்று எட்டுத் திசையும் கிடுகிடுத்து நடுங்கும் படியாக அலறினார்.

பின்னர், அம் முதுபெருங் கிழவர் ஆதித்த கரிகாலன் பிறந்ததிலிருந்து நடந்த சம்பவங்களை ஒவ்வொன்றாகக் கூறிப் புலம்பினார். அவன் பிறந்த நாளில் நடத்திய கொண்டாட்டங்களைக் குறிப்பிட்டார். அவன் குழந்தையா யிருந்தபோது தமது மடியிலும் கரங் களிலும் தோள்களிலும் கொஞ்சி விளை யாடியதைச் சொல்லி அழுதார். அவ னுக்கு வேல் எறியவும் வாள் பிடித்துச் சண்டை செய்யவும் தாம் கற்றுக் கொடுத்ததை யெல்லாம் சொன்னார். பதினாறுவது பிராயத்தில் சேவூர்ப் போர்க் களத்தில் அவன் நிகழ்த்திய அசகாய சூரத்தனமான வீர பராக்கிர மச் செயல்களை ஒவ்வொன்றாகக் கூறித் துக்கித்தார்.

''ஐயோ! பாண்டியனோடு நடத்திய அந்த வீரப் போர்களிலே நீ இறந்து வீர சொர்க்கம் அடைந்திருக்கக் கூடாதா? இந்தச் சண்டாளன் சம்புவரையனும் இவனுடன் சேர்ந்த சதிகாரர்களும் செய்த சூழ்ச்சிக்கு இரையாகியா மாண் டிருக்க வேண்டும்? அந்தோ! உன்னை நானே இவன் விருந்தாளியாகப் போகு மாறு சொல்லி அனுப்பினேனே? எனக்கு வயதாகி விட்டது. உனக்கு இங்கே நண்பர் வேண்டும் என்று எண்ணி, இவன் மகளை நீ மணந்து கொண்டால் உன் கட்சியில் இருப்பான் என்று நம்பி அனுப்பினேனே? சம்புவரையன் மாளி கைக்கு அனுப்புவதாக எண்ணிக் கொண்டு யமனுடைய மாளிகைக்கு விருந்தாளியாக அனுப்பி விட்டேனே? நான் அல்லவோ பாதகன்? நான் அல் லவோ உன்னைக் கொன்றவன்?'' என்று கூறி மீண்டும் மீண்டும் தம் தலையிலே அடித்துக் கொண்டார்.

பின்னர் திடீரென்று சோகத்திலிருந்து விடுபட்டு ரௌத்திராகாரம் அடைந்து சுற்று முற்றும் பார்த்தார். ''அடே சம்புவரையா! உண்மையைச் சொல்! இளவரசர் எப்படியடா மாண்டார்? என்ன சூழ்ச்சியடா செய்தாய்? தேவேந்திரனே வந்து எதிர்த்தாலும், நேருக்கு நேர் நின்று அவனை வென்றிருக்க முடியாதே! எத்தனை பேரை அவன் பேரில் ஏவிவிட்டாய்? அவர்கள் எங்கே மறைந்திருந்து எப்படியடா இந்த வீராதி வீரனைக் கொன்றார்கள்? உண்மையைச் சொல்லிவிடு!'' என்று கர்ஜித்தார்.

சம்புவரையரும் கோபத்தோடு, ''கிழவா! உன் முதுமைப் பிராயத்தை முன்னிட்டுப் பொறுத்திருக்கிறேன். இளவரசர் எப்படி இறந்தார் என்று உனக்கு எவ்வளவு தெரியுமோ, அவ்வளவுதான் எனக்கும் தெரியும். இளவரசர் சடலத்தைத் தூக்கிக் கொண்டு வந்தானே, அவனைக் கேட்டால் ஒருவேளை சொல்லுவான்! என்னைக் கேட்பதில் என்ன பயன்?'' என்றார்.

''அடே! உன்னுடைய மாளிகையில் உன்னுடைய விருந்தாளியாக இருக்கும்போது இச்சம்பவம் நேர்ந்திருக்கிறது. நீ ஒன்றும் அறியாதவன் போல் பேசுகிறாய். இதை யார் நம்புவார்கள்? நல்லது; உன்னைச் சுந்தர சோழச் சக்கரவர்த்தி கேட்கும்போது இந்த மறுமொழியை அவரிடம் சொல்லு! வீரர்களே! இந்தச் சம்புவரையனையும் சிறைப்படுத்துங்கள். இவனுடைய மாளிகை, மதில் சுவர் எல்லாவற்றையும் இடித்துத் தரையோடு தரை ஆக்குங்கள்!'' என்று கிழவர் இடிமுழக்கம் போன்ற குரலில் கட்டளை இட்டார்.

அப்போதுதான் திரும்பி வந்திருந்த பார்த்திபேந்திரன் மலையமானைப் பார்த்து, ''ஐயா! இந்த மாளிகையை அழிக்கும் பொறுப்பு நமக்குக் கிடையாது. அக்னி பகவான் அந்த வேலையை மேற்கொண்டு விட்டார்! அதோ பாருங்கள்!'' என்றான்.

மலையமான் பார்த்தார். அந்தப் பெரிய மாளிகையில் ஒரு மூலையில் சற்று முன் காணப்பட்ட தீ வெகு சீக்கிரமாகப் பரவி வருவதைக் கண்டார். பிரம்மாண்டமாக வளர்ந்து வானளாவிக் கொழுந்து விட்டெரிந்த அப்பெருந்தீ, மாட கூடங்களையும், மச்சு மெத்தைகளையும், கோபுரம் கலசங்களையும் விழுங்கிப் பஸ்மீகரம் செய்துகொண்டு மேலும் மேலும் இரை தேடி அதன் ஆயிரம் பதினாயிரம் செந்நாக்குகளை நீட்டிக் கொண்டு விரைந்து வருவதைக் கண்டார். அந்தக் கோர பயங்கரமான காட்சியைப் பார்த்த வண்ணமாகத் திருக்கோவலூர் வீரர்கள் பிரமித்து நிற்பதையும் கண்டார்.

''சரி! சரி! அக்கினி பகவான் நமது வேலையை ஏற்றுக் கொண்டு விட்டார். நல்லது, பார்த்திபேந்திரா! உடனே புறப்படுவோம். மூன்று உலகமாளும் சுந்தரசோழ சக்கரவர்த்தி தமது மூத்த மகனைப் பார்க்க வேண்டும் என்று மூன்று வருஷங்களாகச் சொல்லி அனுப்பிக்கொண்டிருந்தார். என் மகள் வானமாதேவி இளவரசனை அழைத்து வரும்படி எனக்குச் சிபாரிசு மேல் சிபாரிசு அனுப்பிக் கொண்டிருந்தாள். உயிரற்ற இளவரசனின் சடலத்தையாவது அவர்கள் கடைசி முறையாகப் பார்க்கட்டும். இந்த வீராதி வீரனுடைய உடலைச் சண்டாள சம்புவரையனுடைய மாளிகையை விழுங்கிய அக்கினிக்கு நாம் இரையாக்க வேண்டாம். தஞ்சாவூருக்கு எடுத்துச் செல்வோம். சக்கரவர்த்தியின் சந்நிதானத்தில் கொண்டு போய்ப் போடுவோம். உயிர்க் களை இழந்த திருமுகத்தையாவது பெற்ற தாயும் தகப்பனும் பார்த்துப் புலம்பட்டும். இளவரசனைக் கொன்ற சண்டாளப் பாதகர்களுக்குத் தக்க தண்டனை சக்கரவர்த்தியே விதிக்கட்டும்!'' என்றார் மலையமான். (தொடரும்)

# வீணை

'நாவல்'

விம்மி விம்மி எங்கேயோ போகின்றேன், நீள்
வான்முகட்டின் உச்சிக்கா, பாதாளத்தின்
கும்மிருட்டில் குமையு மதன் வேர் நுனிக்கா,
குறுகும் இடைவெளியினிலே குமுறுகின்ற
வெம்மை குளிர், கவலை, திமிர், களிப்புத் தாபம்,
மோகவெறி, தளிர் அரும்பு, மலர் உதிர்வு,
கம்மையிந்த வாழ்வு, சூடு பிடிப்பதன் முன்
கருட்டவரு சாவு நிழல் இவற்றினூடே,

எங்கேயோ போகின்றேன், எங்கே என்று
ஏது சொல்வேன், விரைகின்றேன், இதற்குள் வீணை
பொங்கு வண்ண வான வில்லைப் பூட்டும், மேலே
பொலபொல என்று(உ)திருமழை இதழ்கள் தூவும்;
திங்களுக்கும் கதிருக்கும் நடுவில் ஆடுந்
திடரினிலே, செல்லரிக்கத் தன்னை விட்டு
மங்கிவிழும் சிறு மனிசக் களரிற் பூக்கும்
மாமாய மல்லிகையாய் மலரும், வாடும்,

தனியாக மெலிந்த ஒலி மருளும்: அந்தத்
தனிமையினைத் தாங்காமல் தேய்ந்து, கொள்ளைக்
கனிவுடனே குழைந்து மற்றோர் ஒலியைத் தொட்டுக்
கரைவதற்குக் கை நீட்டும், கமகமாகும்.
மனிதனைப் போல் தனைப் பெரிதாய் எண்ணி நீளும்.
மறுகணத்தில் பிறர் வாழ்வில் தனை இழக்கும்
இனிய வெளி எல்லையினைத் துழவுகின்ற
ஏதோவாய்த் துடிதுடிக்கும், உயிர்க்கும், ஏங்கும்.

'யாரெம்மை எழுப்புகிறான்' என்று கேட்க
எழுமுன்னே மறையும் பின் தோன்றும், கால
வாரிதியில் புரளுகின்ற கானலாகக்
கண் சிமிட்டும், நிலை தேடித் தவிக்கும், இந்தப்
பாரெல்லாம் படர்கின்ற பகுதி காணப்
பதைக்கின்ற மனத்தைப் போல் பதறும். பண்ணின்
வாரமெனத் தலை தூக்கி 'நானா', நானா'
எனும்பு திரை எழுப்பி விடை காணா தோயும்.

ஒலித் திரள்கள் விரிந்து விரிந்தென்னை மோதும்
உருண்டுருண்டு சரிந்து விழும். எழுந்து சுற்றிப்
பலவாகப் பிரியும், ஒன்றாய்க் கரையும், மீட்டில்
பாய்வதற்குத் துள்ளும். ஒளிப் பாதை மேலே
அலகிறந்த தாபத் தோடலையும். தீரா
அடைவுக்குள் ஒடுங்கி இந்த ஏழையைப் போல்
உலகனைத்தும் மீட்டுகின்ற விரலின் நாத
ஒருமைக்குள் ஒருக் களிக்கப் பார்க்கும், தோற்கும்.

எங்கேயோ, எங்கேயோ, எங்கே என்ன
யாரறிவார், இவ்வீணை எனை இழுத்துப்
பொங்கு மொரு நெடு மருமம் எதையோ காணப்
போக்கிவிட்டு நின்றது காண் சுதியில். மீட்டு
மங்கியது. மடை திறந்த மோனத் துள்ளே
மனம் சுருண்டு மடங்கு முன்னே, தெருவிலிருந்து
பொங்கிவரும் இரைச்சல் உள்ளே புரண்ட(து) இந்தப்
பூசல் இசையாகி என்று தொடுமோ மோனம்?



''கிண்டலா பண்ணறே? வெளியே வா கவனிக்கறேன் !'' -- பாலி

1. Aன் 2. Bக்கா 3. Cகரெட் 4. Dக்காஷன் 5. Eஸிச்சேர் 6. Gனு 7. Iறுவாம் 8. Jன்மம் 9. Kள்வி 10. Lலோரும் 11. Mமாத்திரம்? 12. Nறுடு 13. Oலி 14. Pத்தலாட்டம் 15. Rமோனியம் 16. Sன்ஸ் 17. Tக்கெட் 18. Uகம் 19. Vஷயம். எதையெல்லாமோ எதிலெல்லாமோ கலக்கும் இன்றைய நாளில் நாமும் இப்படிக் கலந்து பார்ப்போமே! தயாரிப்பு: 'சங்கமன்'




ஒரு கடையில் இரண்டு அறிவிப்புகள் காணப்பட்டன. ஒன்று: ''கடன் கிடையாது''. அடுத்தது: பாக்கி களைப் பத்துத் தேதிக்குள் கொடுத்துத் தீர்த்துவிட வேண்டும்! - பாலி -- கத்தோலிக் டைஜஸ்ட்



## நெருப்புப் பிடிக்காத காகிதம்



ருஷ்யாவில் உள்ள கியேவ் நகர நிபுணர்கள் நெருப்புப் பிடிக்காத காகிதத்தைக் கண்டுபிடித்துள்ளனர். இது எல்லா விதத்திலும் சாதாரண காகிதம் போல்தான். ஆனால் நெருப்பில் காட்டினால் தீப்பிடிக்காது! சுமார் 800 டிகிரி சென்டிகிரேட் உஷ்ணத்தை தாங்குமாம்! இதைக் கரையானும் அரிக்க முடியாது! - சம்பத் குமாரி

ஆதாரம்: 'சோவியத் யூனியன்'

* * *

துப்பறியும் கதைகளில் கடிதத்தைப் படித்துவிட்டுக் கொளுத்தி விட்டான் என்று எழுதுவதுண்டு. இனி அப்படி எழுதுமுன் யோசிக்க வேண்டும். ஏனெனில், அக்கடிதம் தீப்பிடிக்காத காகிதத்தில் எழுதப் பட்டிருக்கலாம் !



''தொலைகிறது. சம்பளம் உங்களைப் போல் இருந்துவிட்டுப் போகட்டும்; ஆனால் கிம்பளம் என்னைப்போல் இருக்கிறமாதிரி பார்த்துக் கொள்ளுங்கள்.''

விமான புகமா பிருக்கலாம். ஆனால் மாட்டு வண்டி விமானப் போக்குவரத்துக்கு உதவுகிறதே! விமானத்துக்குள் பயணிகள் ஏறப் பயன்படுகிறதே படிக்கட்டு. அதைத் தயாரித்துப் புதுடெல்லி விமான நிலையத்துக்குக் கொண்டு வர வேண்டி இருந்தது. எப்படிக் கொண்டு வந்தார்கள்? ஒரு மாட்டு வண்டியில் ஏற்றிக் கொண்டு வந்தார்கள் ! - பாபு

ஹிந்துஸ்தான் டைம்ஸ்

## துப்பாக்கி வேண்டும் !



துப்பாக்கிகள் சேகரிப்பதை ஒரு பொழுதுபோக்காகக் கொண்ட ஜான்என்ற அமெரிக்கப் பிரமுகர் கென்னடியைச் சுட்ட துப்பாக்கியை வாங்க முடிவெடுத்தார். அதற்காக, ஆஸ்வால்டின் மனைவிக்கு 50,000 ரூபாய் முன்பணம் கொடுத்தார். அதுமட்டுமல்ல; துப்பாக்கி தம்மிடம் வந்ததும் மேலும் 175,000 ரூபாய் கொடுப்பதாகவும் வாக்களித்திருந்தார். ஆனால் அரசாங்க அதிகாரிகள் மரீனாவிடம் அந்தக் கைத்துப்பாக்கியைக் கொடுக்க மறுத்துவிட்டார்கள். அதனால் ஜான் அரசாங்கத்தின்மீது வழக்குத் தொடுத்தார். டல்லாஸ் நகரில் கென்னடி கொலை நடந்த இடத்திலிருந்து ஒரு மைல் தூரத்துக்குள்இருந்த ஒரு நீதிமன்றத்தில் இவ் வழக்கு விசாரணைக்கு வந்தது. வழக்கின் முடிவில் நீதிபதி அளித்த தீர்ப்பு: ''கொடூரத்தின் காட்சியாகவும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததாகவும் விளங்கும் இந்தத் துப்பாக்கி ஒரு குறிப்பிட்ட மனிதரிடம் இருக்கவேண்டாம். அது அரசினிடமே இருக்கட்டும்.'' ஆதாரம்: ''டைம்'' - தகவல்: சரோஜா ராமச்சந்திரன்



கல்வியையும் செல்வத்தையும் சாவே வராதென்னும் மனப்போக்குடன் சட்ட வேண்டும்.

யமன் தலைமயிரைப் பிடித்திழுக்கிறானென்ற மனப்பிராந்தியுடன் தருமம் செய்ய வேண்டும்.

-ஹிதோபதேசம் - எஸ். எஸ். ராஜசேகரம்.

# சுழிக்காற்று

## அத்தியாயம் 17

சாமுண்டிக் கோட்டை ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்த போது வடக்கே போகும் வண்டி வர இன்னும் வெகு நேரம் காத்திருக்க வேண்டும் என்பதை அறிந்தார்கள். மேல் வகுப்புப் பிரயாணிகள் தங்கும் விடுதியில் போய் உட்கார்ந்தார்கள்.

''எங்கே போவதாக உத்தேசம் மஞ்சுளா?'' என்று கேட்டான் சேகர்.

''எங்கு வேண்டுமானாலும் போகலாம் — உங்கள் விருப்பம் போல. நான் நினைத்து வந்த மகிழ்ச்சியை இந்தப் பிரயாணத்தில் உங்களுக்குத் தர முடியவில்லை. அதற்காக வருந்துகிறேன்'' என்றாள்.

மஞ்சுளாவின் பதிலில் இப்போது அவன் சிந்தனை லயித்திருக்கவில்லை. எங்கோ

விஜயா

பார்த்துக் கொண்டிருந்தவன் கேட்டான்: ''உங்கள் குடும்பத்துக்கு இத்தனை சொத்து எப்படிச் சேர்ந்தது? பரம்பரைச் சொத்தா அல்லது...?''

''ஓரளவுக்கு எங்கள் குடும்பம் செல்வக் குடும்பம்தான். ஆனால் இத்தனை பணம் சேர்த்தது எங்கள் தாத்தா தான். யுத்தத்தின்போது ராணுவத்துக்கு உணவுப் பொருள் விநியோகம் செய்யக் காண்ட்ராக்ட் எடுத்தார் என்று சொன்னேனே நினைவில்லையா! அதற்காகவே — பொருள்களைக் கிடாமப் சேகரித்து வைக்க வென்றே — அமைத்த பெரிய பெரிய ராட்சச குளிர்சாதனப்பெட்டிகள் இன்னும் கூட உபயோகமின்றி எங்கள் பண்ணையில் உள்ளன. காய் கறிகள், பால், வெண்ணெய், இறைச்சி எல்லாம் எங்கள் பண்ணையிலிருந்து ராணுவத்துக்கு விநியோகம் ஆயின. அதில் குவிந்த சொத்துத்தான் இத்தனையும்'' என்றாள் மஞ்சுளா.

''உன் தகப்பனார் தொடர்ந்து அதே முறையில் சம்பாதிக்கவில்லையா?''

''எப்படி முடியும்? யுத்த காலத்துக்குப் பிறகு உணவுப் பொருள் ராணுவத்துக்கு அத்தனை தேவையில்லையே? அந்தக் காண்ட்ராக்ட் முடிந்துபோய் விட்டது. ஆனாலும் அப்பா பண்ணையிலிருந்து, பணம் பண்ணிக் கொண்டு தான் இருந்தார் - தாத்தாவைப் போல வாரிக் கொட்டாவிட்டாலும்.''

ஸ்டேஷனில் ஏதோ ஒரு ஷட்டில் வந்து போன ஆரவாரம் அடங்கச் சிறிது நேரம் பிடித்தது. அதனால் இவர்கள் சம்பாஷணையும் தடைப்பட்டது. கோபால் வெயிட்டிங் ரூமுக்கு வெளியே வந்து நின்றுகொண்டு பிளாட்பாரத்தின் கலகலப்பை ரசித்தபடி இருந்தான். எப்போதுமே அவனுக்குப் போவோர் வருவோரைப் பார்ப்பதில் ஒரு தனி ஆர்வம்.

இப்படிக் கோபால் பராக்குப் பார்த்துக் கொண்டிருந்தபோது இருவர் அவன் அருகில் வந்து நின்றார்கள். வரப் போகும் ஒரு வண்டியை எதிர்பார்த்துத்தான் அவ்விருவரும் அங்கு நின்று கொண்டிருந்தார்கள். கோபாலை அவர்களுக்குத் தெரியாது. ஆனால் அவர்கள் பேச்சு கோபாலுக்குத் தெரிந்த விஷயமாக இருந்தது.

''முல்லைவாசல் ஜமீனுக்கு இப்படியொரு கஷ்ட காலம் வரவேணும்...''

''பெரியவர் போய் ரெண்டு நாள் கூட ஆகல்லே, அதுக்குள்ளே சின்னவர் இப்படித் திடீர்னு போவார்னு யார் நினைச்சிருப்பாங்க?''

''திடீர்னு போய்ட்டார்னு சொல்ல முடியாது. கந்தசாமியும் அவர் அப்பாவைப் போலவே பல மாதங்களாகப் படுத்த படுக்கையாகத்தானே கிடந்தார்...''

''இருந்தாலும் இப்படிப் போக்குனு அப்பாவைத் தொடர்ந்து பிள்ளையும் உடனே புறப்பட்டுப் போக வேணும்.''

''ஆமாம், அந்தப் பொண்ணு மஞ்சுளா எங்கேயோ மதராஸிலே இருக்காப்பலே...''

''இல்லீங்க... அது இப்ப ஊருக்கு வந்திருக்கறதாகக் கேள்விப்பட்டேன்.''

இதற்குமேல் கோபாலினால் அவர்கள் சம்பாஷணையைப் பொறுமையோடு கேட்டுக் கொண்டு நிற்க முடியவில்லை. அவர்கள்



# அஜீரணம் என்றால் குழந்தை மீது எரிந்து விழுவானேன்?

ஹ்யூலெட்ஸ்
மிக்சர்
ஜீரணத்திற்குச்
சிறந்தது




அஜீரணத்தால் பாதிக்கப்பட்டால் உங்களுக்கு வயிற்றுப் பொருமலும், எரிச்சலும் ஏற்படுவது இயற்கை. குழந்தைகள் மீது எரிந்துவிழத் தோன்றும். தாய்மையின் அன்பு தணிந்து காணப்படும்.

ஹ்யூலெட்ஸ் மிக்சர் அருந்துங்கள். அது விரைவில் நிவாரணம் அளிக்கின்றது. வலியுண்டாக்கும் அமிலங்களைச் சமனப்படுத்தி ஜீரண உறுப்புக்கள் சரிவர இயங்குவதற்கேற்ப பாதுகாப்பு அளிக்கின்றது.

ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்று உபாதைகளுக்கு நல்லது.

வயிற்றுப்போக்கு இருந்தால் அபினிசேர்ந்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் (கறுப்பு மூடி) குணமளிக்கும்.

C.J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா)
பிரைவேட் லிமிடெட்
150A/2, மவுண்டு ரோடு, சென்னை 2

CJH-6099I

அருகில் சென்று ''ஐயா! நீங்கள் இப்போது பேசிக் கொண்டிருந்தீர்களே, அது முல்லைவாசல் ஜமீன்தார் தர்மலிங்கம் அவர்களின் மகன் கந்தசாமி அவர்களைப் பற்றித்தானே? அவருக்கு என்ன?'' என்று கேட்டான்.

''சின்ன ஜமீன்தார் கந்தசாமி அவர்களின் உடல்நிலை ரொம்ப சீரியஸாக இருக்கிறதாகவும் டாக்டர்கள் வேகமாகப் பண்ணை பங்களாவுக்கு விரைந்து கொண்டிருக்கிறதாகவும் டவுனிலே பேசிக்கிட்டாங்க ஐயா. நீங்க இந்தப் பக்கத்துக்குப் புதுசு போலிருக்கே... ஐயா யாரோ?'' என்றார் அவர்களில் ஒருவர்.

''நான் புதிசுதான். என்னைப் பற்றிச் சொல்ல இப்ப நேரமில்லே. நான் வரேன்'' என்று வெயிட்டிங் ரூமுக்குள் ஓடினான் கோபால். அதே சமயத்தில் அவர்கள் ஏறிச் செல்லவேண்டிய வண்டியும் பிளாட்பாரத்துக்குள் பேரிரைச்சலுடன் வந்து நின்றது.

கோபால் சொன்னதைக் கேட்ட மஞ்சுளா துடித்துப் போய்விட்டாள். ஒரு மணி நேரத்துக்கு முன்புதானே அவள் தன் தகப்பனாரிடம் பேசி விடைபெற்றுக் கொண்டாள். அதற்குள்ளாக......? உடனே டெலிபோனில் பண்ணை பங்களாவுக்குத் தொடர்பு கொள்ளத் துடித்தாள். ஆபத்து என்றால் ஏன் சித்தி உடனே தனக்கு ஆள் அனுப்பவில்லை? இங்கு வெயிட்டிங் ரூமில் தங்கி இருப்பது அவளுக்குத் தெரியாதிருக்கலாம். இப்படி வினவும் விடையுமாக முல்லைவாசல் ஜமீன் பங்களாவோடு டெலிபோன் தொடர்பு கிடைக்கும் வரை தவித்துப் போய்விட்டாள். அவள் பரிதாபமான நிலையைக் கண்டு சேகரோ கோபாலோ ஆதரவாகக் கூட எதுவும் பேச முடியாததொரு நிலையில் இருந்தார்கள். தங்களுடைய எந்த ஆறுதலும் அவளுக்கு அந்த நிலையின் வேதனையைக் குறைக்காது என்பது அவர்களுக்குத் தெரியும்.

மஞ்சுளா டெலிபோனில் சித்தி கோகிலாவுடன் பேசிவிட்டுப் போனை வைத்துத் திரும்பியபோது அவள் முகம் பீதி நிறைந்து வெளுத்து வேதனை பூசக் காணவே பரிதாபமாக இருந்தது.

''சித்தியினால் பேசவே முடியவில்லை. திடீரென்று அப்பாவின் நிலை மோசமடைந்து விட்டதாம்; நாம் அங்கிருந்து கிளம்பிய சிறிது நேரத்துக்கெல்லாம். உடனே அவள் அண்ணா — டாக்டர் ரகுநாத்துக்குப் போன் செய்திருக்கிறாள். அவர் டாக்டர் ஈசுவரனுடன் பங்களாவுக்கு விரைவதற்குள் காலம் கடந்து விட்டது. காலன் வந்த காரியத்தை முடித்துக் கொண்டு போய்விட்டானாம்.''

மஞ்சுளாவின் செய்தி அங்கு ஓர் அமைதியான சூழ்நிலையை உருவாக்கிற்று. அந்த மௌனத்தைக் கோபால் தான் கலைத்தான். கலகலப்பான மனிதனாயிற்றே அவன். கனத்துக் கிடக்கும் சூழலை விரும்பாதவன் அவன்.

''நாம் உடனே போகாமல் இங்கு தங்கியதும் நல்லதாகப் போயிற்று. அந்த வழிப்போக்கர்கள் பேச்சை நான் கவனிக்காதிருந்தால் நாம்பாட்டுக்கு ரயிலேறிப் போயிருப்போம். இந்த முக்கியமான செய்தி நமக்குக் கிடைக்கப் பல நாட்களாயிருக்கும்.''

''பங்களாவிலிருந்து கார் வரும்வரை என்னால் இங்கு காத்திருக்க முடியாது. நான் உடனே எப்படியாவது அங்கு போக வேண்டும். இந்த வேளையில் ஏதாவது டாக்ஸி...'' என்றவள் சட்டென்று ஏதோ நினைவுக்கு வந்தவளாக, ''வாருங்கள், போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகலாம்'' என்று வீதியில் இறங்கி ஓடாத குறையாக நடக்கலானாள்.

போலீஸ் ஸ்டேஷனில் இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் தம் மேஜையின் முன் அமர்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். மஞ்சுளா அதே வேகத்துடன் அவர் மேஜை முன் போய் நின்றாள். சேகராலும் கோபாலாலும் அவள் வேகத்துக்கு ஈடுதர முடியவில்லை என்று சொல்ல முடியாது. மஞ்சுளாவின் அந்த நிலையின் மனோவேகம், தவிப்பு, பரபரப்பு ஆகியவைகளை அவர்களிடம் காண முடியாததில் வியப்புக் கொள்ளவும் முடியாது. மஞ்சுளாவின் தகப்பனார் அல்லவா இறந்திருக்கிறார்? சற்று முன்பு பார்த்துப் பேசிய அவர் அப்படி இறந்ததை எந்தப் பெண்ணினால்தான் தாங்கிக் கொள்ள முடியும்?

''இன்ஸ்பெக்டர் சார்...'' என்ற மஞ்சுளாவினால் ஏனோ மேலே பேச முடியவில்லை. துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டது. சட்டென்று கேட்ட ஒரு பெண்ணின் குரலினால் திடுக்கிட்டுத் தலைநிமிர்ந்த ஏகாம்பரம் தம் எதிரே மஞ்சுளா கண் கலங்க நிற்பதைக் கண்டதும் திகைத்துத்தான் போனார்.

''என்னம்மா?...'' என்று கேட்டவருக்கு மேலே பேச்சு ஓடவில்லை. மஞ்சுளாவே தன் துக்கத்தை அமுத்தி உள்ளே தள்ளிவிட்டுப் பேசினாள்: ''சார்... என் அப்பா இறந்துவிட்டாராம். நான் உடனே முல்லைவாசலுக்குப் போக வேண்டும்...''

''உங்கள் தகப்பனாரா? கந்தசாமி அவர்களா? அடாடா... எப்போது?...

செய்தியைக் கேட்க மனத்துக்கு மிகவும் வேதனையாக இருக்கிறதே'' என்றார் ஏகாம்பரம். ''உட்காருங்கள் மஞ்சுளா!'' என்று உபசாரமும் செய்தார்.

''இந்த வேளையில் உங்கள் ஒருவரால் தான் உதவ முடியும்...'' என்றாள் மஞ்சுளா.

''என்ன உதவி? உங்கள் தாத்தாவுக்கும் தகப்பனாருக்கும் இந்த வட்டாரமே கடமைப் பட்டிருக்கிறதம்மா. என்றால் செய்ய முடிந்த உதவி எதுவானாலும் நான் அவசியம் செய்கிறேன்.''

''நாங்கள் உடனே முல்லைவாசலுக்குப் போயாக வேண்டும்...''

''இவ்வளவுதானே? நம்ம மிட்டாதார் ஜகந்நாதன் வீட்டுக்கு ஆளை அனுப்பி வில்வண்டியோடு வரச் சொல்கிறேன்..... இந்தாப்பா ஸெவன் ஸெவண்டி...'' இன்ஸ்பெக்டர் கான்ஸ்டபிளைக் கூப்பிட்டார். ஆனால் மஞ்சுளா இடைமறித்தாள். ''அந்த வில் வண்டியை ஏற்பாடு செய்து தர உங்களிடம் நான் வரவேண்டியதில்லையே இன்ஸ்பெக்டர்... உங்கள் பொறுப்பிலிருக்கும் காளியப்பனுடைய டாக்ஸியின் உதவிதான் எனக்கு அவசரமாக இப்போது வேணும்'' என்றாள் மஞ்சுளா.

இன்ஸ்பெக்டர் முகம் சட்டென்று மாறியது. ''சாரி மஞ்சுளா! அதை உபயோகிக்க என்னால் அனுமதிக்க முடியாது. அது ஒரு வழக்கு சம்பந்தப்பட்ட சாட்சிப் பொருள்.'' இத்தனை நேரம் அவர் குரலில் கலந்திருந்த கனிவு வறண்டு விட்டிருந்தது.

மஞ்சுளாவின் குரல் கெஞ்சலாக ஒலித்தது. ''பிளீஸ், இன்ஸ்பெக்டர் சார்! சட்டம் என்ற வேலிக்கு வெளியில் வந்து மனிதாபிமானத்தோடு என் வேண்டுகோளைப் பரிசீலியுங்கள். காளியப்பனின் டாக்ஸியை விட்டால் நாங்கள் விரைவாக அங்கு போவதற்கு வேறு வழியே இல்லை. நான் அதை உடனேயே பத்திரமாகத் திருப்பி அனுப்பி விடுகிறேன்.'' உருக்கமாக வேண்டுகோள் விடுத்தாள் முல்லைவாசல் ஜமீன்தாரின் ஒரே வாரிசான இளைய ஜமீன்தாரிணி மஞ்சுளா.

மஞ்சுளா மீது இன்ஸ்பெக்டருக்கு ஏற்பட்டிருந்த மனஸ்தாபம் சமீபத்தியதுதான். அவளிடம் அவருக்கு அபிமானம் உண்டு; மரியாதையும் உண்டு. அவள் விருப்பத்தை ஒரேயடியாக நிராகரிக்கவும் அவரால் முடியவில்லை. சங்கடமானதொரு நிலைதான் அது. போலி சமாதானமாக அவர் வாயிலிருந்து வார்த்தைகள் உதிர்ந்தன.

''துரைசாமியை (துப்புத் துலக்கும் போலீஸ் அதிகாரி) ஒரு வழக்கு விஷயமாக எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்...'' என்றவர் தாம் கூறிய சமாதானம் தமக்கே பிடிக்காததாலோ என்னவோ, உடனே ஒரு பெருமூச்சுடன் ''ம்... சரி, வாருங்கள் போகலாம் மஞ்சுளா. இந்தக் காக்கி உடையும் கடமையும் உங்கள் கலங்கிய கண்களுக்கு முன்னால் பலமிழந்து விட்டன'' என்று எழுந்து வெளியில் வந்தார். ஸ்டேஷன் எல்லைக்குள் ஓர் ஓரமாக நிறுத்தப்பட்டிருந்தது காளியப்பனின் புகழ்பெற்ற 'டாக்ஸி'. அதன் கதவைத் திறந்து விட்டார் இன்ஸ்பெக்டர். சேகரும் மஞ்சுளாவும் ஏறி அமர்ந்து கொண்டார்கள். காளியப்பனின் டாக்ஸியைக் கையாளுவதில் அனுபவம் உண்டு மஞ்சுளாவுக்கு. ஆகவே அவளே அதைச் செலுத்த டிரைவர் ஆசனத்தில் அமர்ந்தாள். அவள் அருகில் சேகர் உட்கார்ந்து கொண்டான். பின்னால் கோபால் ஏறிக் கொண்டான்.

ஏகாம்பரம் தம் பையில் இருந்த டாக்ஸியின் சாவியை எடுத்து மஞ்சுளாவிடம் கொடுத்தார். அவர் பார்வையிலிருந்து எதையோ படித்துத் தெரிந்து கொண்ட மஞ்சுளா, ''கவலைப்படாதீர்கள் இன்ஸ்பெக்டர். டாக்ஸியைப் பத்திரமாகக் கொண்டு வந்து ஒப்படைத்து விடுகிறேன்'' என்றாள்.

இன்ஸ்பெக்டர் ஒதுங்கிக் கொள்ள மஞ்சுளா வண்டியை ஸ்டார்ட் செய்தாள். ஆனால் அது கிளம்பவில்லை. சலனமே இல்லை. சேகர் காரின் முன்புறம் திறந்து பார்த்தான். மின்கல இணைப்புத் துண்டிக்கப்பட்டு ஒயர் தொங்கிக் கொண்டிருந்தது. சட்டென்று அந்த மின்கல ஒயர்களை இணைத்து முடுக்கினான் சேகர். இப்போது மஞ்சுளா ஸ்டார்ட் செய்த போது வண்டி ஒரு குலுங்குக் குலுங்கித் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்ட அரக்கனைப் போல் உறுமிக் கொண்டு கிளம்பியது.

**வ**ண்டி நிற்கும் வரைகூடக் காத்திருக்கவில்லை மஞ்சுளா. அவளால் அப்படி அமைதியாகச் செயல்பட முடிந்தால்தானே? காளியப்பனின் டாக்ஸி முல்லைவாசல் பண்ணை பங்களாவின் போர்ட்டிகோவுக்குப் போய் நிற்பதற்குள் கதவைத் திறந்து கொண்டு கீழே குதித்து உள்ளே ஓடினாள். எப்போதும் நிசப்தமாக இருக்கும் அந்த இடத்தை இப்போது இன்னும் பயங்கரமானதொரு மௌனம் கப்பிக் கொண்டு கனக்க வைத்திருந்தது.

உள்ளே நுழைந்த மஞ்சுளா யாரையும் எதையும் பார்க்கவில்லை. ஒரே

# சோப் ஒன்று-பயன் மூன்று!

# நீகோ *கிருமிநாசினி* சோப்

## மற்றெந்த சோப்பையும் விட

## உங்கள் சருமத்திற்கு

## மிகுந்த பாதுகாப்பளிக்கிறது

**1** நீகோ சருமக் கிருமிகளைக் கொல்லுகிறது

**2** நீகோ உடல் துர்நாற்றத்தைப் போக்குகிறது

**3** நீகோ உடலைத் துப்புரவாக்கிப் பாதுகாப்பளிக்கிறது

**நீங்கள் ஆரோக்கியமான** சருமத்தைப் பெற, நாள்தோறும் நீகோ சோப் தேய்த்துக் குளியுங்கள். நீகோவின் நச்சுநாச நுரைவளம் சரும நோய்க் கிருமிகளைக் கொன்று, உங்கள் சருமத்திற்கு ஆரோக்கியமளிக்கிறது. நீகோவிலுள்ள மருந்துப் பொருள்கள் வியர்வையினால் ஏற்படும் துர் நாற்றத்தைப் போக்குகின்றன. நீகோ சின்னஞ்சிறிய சருமத் தொற்றுகளையும் எதிர்த்துப் போராடி, சருமத்துக்கு மென்மையளிக்கிறது. அதோடு மினுமினுப்பும் புதுமையும் தருகிறது. இது மட்டுமல்ல, முகப் பருக்கள் மற்றும் வேர்க்குருவிலிருந்தும் உங்கள் சருமத்துக்குப் பாதுகாப்பு தருகிறது நீகோ. ஷாம்புவாகக்கூட இதைப் பயன்படுத்தலாம். இதனால் பொடுகு விழாமல் தடுக்கிறது நீகோ. எனவே, இன்று முதலே, நீகோ சோப் உபயோகிக்கத் தொடங்குங்கள்.




*TRIPLE ACTION*

**NEKO**

The Original Germicidal Soap

PARKE-DAVIS

## ஷஷ்டியப்த பூர்த்தி



சென்னை ஸிம்ஸன் கம்பெனியைச் சேர்ந்த திரு ஆர். முத்துராம சாமியின் அருமைத் தந்தையார் **ஸ்ரீ எம். ராஜம் அய்யரின்** ஷஷ்டியப்த பூர்த்தி வைபவம் சென்னையில் சமீபத்தில் வெகு விமரிசையாக நடைபெற்றது. இவ்வைபவத்துக்கு நண்பர்களும் உறவினர்களும் விஜயம் செய்து அறுபதாண்டு நிறைந்த ராஜம் தம்பதியினரின் பூரண ஆசிர்வாதத்தைப் பெற்றார்கள்.

பாய்ச்சலாக மாடியை நோக்கி ஓடினான். அவன் வேகத்துக்குச் சேகரினால் செயல்படமுடியவில்லை. இருந்தாலும் அவனும் அவளைப் பின்பற்றினான். ஹாலின் மூலையில் முகத்தை மூடியபடி விம்மிக் கொண்டிருந்த கோகிலாவை யாரும் கவனிக்கவே இல்லை.

மஞ்சுளாவின் தகப்பனாரின் அறையில் இப்போது கொஞ்சம் அதிக வெளிச்சம் இருந்தது. அத்தனை மங்கலான வெளிச்சமில்லை. கந்தசாமி கட்டிலில் கிடத்தப்பட்டிருந்தார். தூய வெள்ளைப் போர்வை அவர் உடலை மூடி இருந்தது. தலையணைகளைக் கொண்டு தலையை உயரமாகப் பதிய வைத்திருந்தார்கள். முகத்தில் மூக்குக் கண்ணாடியும் அணிவிக்கப்பட்டிருந்தது. மஞ்சுளா அருகே சென்றாள். அவள் உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன. ''அப்பா...அப்பா'' என்ற வார்த்தைகளைத்தான் அவை உருப் போட்டுக் கொண்டிருந்திருக்க வேண்டும். நரையோடிப் போன கேசத்தை, அதையடுத்து உயர்ந்து பரந்து கிடந்த நெற்றியைத் தொட அவளது நடுங்கும் கரங்கள் நீண்டன. இம்முயற்சிக்காக இப்போது அவள் தகப்பனாரின் முகத்துக்கு அருகே குனிய வேண்டி இருந்தது. அப்போது தந்தையின் முகத்தை அவளால் நன்றாகப் பார்க்கவும் முடிந்தது. குபீரென்று ஒரு கிலி, பயம், பரபரப்பு அத்தனையுமாக அவள் இதயத்தைப் பிழிந்தன. சட்டென்று அவள் தன் கைகளைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டாள். அடுத்த விநாடி அந்த இடத்தை விட்டு வேகமாக வெளியே ஓடி வந்தாள். அப்படி அவளைக் கலக்கியது எது? தந்தையின் முகத்தில் அவள் அப்படி எதைக் கண்டாள்? அந்த அறையை விட்டு வெளியே ஓடி வந்த அதே வேளையில் அப்போதுதான் அங்கு நுழைவதற்கிருந்த சேகரின் மீது மோதிக் கொண்டாள் மஞ்சுளா. தன் மீது வந்து விழுந்த காதலியைச் சேகர் ஆதரவோடு அணைத்துக் கொண்டான். அதற்குமேல் அவளால் அழாமல் இருக்க முடியவில்லை. காதலனின் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மினாள், மஞ்சுளா. தந்தையின் பிரிவால், அவருடைய உயிரற்ற உடலைக் கண்டதால் தன் காதலி கலங்கிப் போய்க் கதறுவதாகத்தான் அவன் எண்ணினான். ஆனால் அவள் குமுறி அழுவதற்கான உண்மைக் காரணம் அதுதானா? இல்லை.

அங்கிருந்தால் அவள் அழுகை, துக்கம் அதிகமாகும் என்று அவளை அணைத்துத் தாங்கியபடி கீழே வந்தான் சேகர்.



கீழ்க் கூடத்தில் சித்தி கோகிலாவின் சகோதரன் டாக்டர் ரகுநாத்தும், தாத்தாவின் டாக்டரான ஈசுவரனும் மஞ்சுளாவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். கோபால் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தான். சோகமே வடிவாகக் கோகிலா அங்கிருந்தாள். மஞ்சுளா, கோகிலா இவர்களின் விசும்பலைத் தவிர அந்த இடம் அமைதியாக இருந்தது. டாக்டர்களின், ஏன் மற்றவர்களின் பார்வையும்கூட மஞ்சுளா மீதே பதிந்திருந்தன. அவள் ஏதாவது பேச வேண்டும் என்று எதிர்பார்த்தார்கள். அவளிடம் ஏதாவது கேட்க வேண்டும் என்று விரும்பினார்கள். அவர்களின் பார்வையால் குத்தப்பட்ட மஞ்சுளா வெடித்தாள்.

''பயங்கரமான செய்திகளைச் சொல்லப் போகிறேன். அதைவிடப் பயங்கரமான விஷயங்களைப் பற்றி உங்களிடம் கேட்கப் போகிறேன்.''

''மஞ்சுளா, நீ என்னம்மா சொல்ல விரும்புகிறாய்?'' என்றார் டாக்டர் ரகுநாத்.

''அப்பாவின் தோற்றத்தில் இப்போது நீங்கள் விபரீதமான மாற்றத்தையோ புதுமையையோ காணவில்லையா?'' என்றாள் மஞ்சுளா. அவளிடம் அழுகை இல்லை. குரலில் கரகரப்பு இல்லை. ஓர் அசாதாரணமான உறுதி பரவிக் கொண்டு வந்தது.

"மஞ்சுளா, நீ இறந்த உடல்களைப் பார்த்திருக்க மாட்டாய். தவிர அப்பாவுக்கு உடம்புக்கு வந்த பிறகு நீ அவரை நெருங்கி இருந்து பார்க்கவில்லை. நான் ஒரு நாளைக்கு இரண்டு தடவை அவர் அருகிலேயே இருந்து சிகிச்சை அளித்தவன். எனக்குத் தெரியாதா? மரணம் மனித உடலில் முடிவானதோர் அமைதியை, சாந்தியை ஏற்படுத்தும். அதுவும் நோய்வாய்ப்பட்ட உடலில் இது அதிகமாக இருக்கும். நோயின் உபாதையால் உடலின் தசை நார்கள் ஒருவித 'டென்ஷனி'ல் இருக்கும். மரணம் அந்த நிலையிலிருந்து அவைகளுக்கு விடுதலையளிப்பதால் தோற்றத்தில்கூட ஒருவித மாற்றம் ஏற்படும்....."

இத்தனை நீளமான வியாக்கியானத்தைத் தான் விரும்பவில்லை என்பதை மஞ்சுளாவின் பார்வையும் முகமும் கூறின. ரகுநாத்தையே சில விநாடிகள் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தவள் சட்டென்று டாக்டர் ஈசுவரன் பக்கம் திரும்பினாள்......

"ஈசுவரன் சார், ஒரு மனிதனின் தோற்றத்தை ஏதாவது ஒரு வகையில் மாறச் செய்யும் சக்தி விஷத்துக்கு உண்டா?" என்று கேட்டாள்.

"விஷமா?.....?" குரல் பேதலிக்கக் கிறீச்சிட்டார் டாக்டர் ரகுநாத்.

"யூ மீன்... பாய்சன்...?" என்றார் டாக்டர் ஈசுவரன். "பயங்கரமான எண்ணமாயிற்றே இது. நான் நினைக்கிறேன் இப்படியொரு சந்தேகம் ஏற்படுவது அத்தனை நியாயமாகப் படவில்லை."

"அப்படியொரு சக்தி விஷத்துக்கு உண்டா?" மஞ்சுளாவின் குரலில் அழுத்தம் தெறித்தது.

"நான் ஒரு டாக்டர்.... உனக்கு அப்படியொரு சந்தேகம் இருக்குமானால் நீ அதை என்னிடம் கேட்டு விளக்கம் பெறுவது முறையானதுதான். ஆனால் நான் கருதுகிறேன், நீ இப்படிக் கேட்பதற்கு எவ்விதமான...."

டாக்டர் ஈசுவரனின் பேச்சை மஞ்சுளாவின் வார்த்தைகள் வெட்டின. "அப்படி யொரு சக்தி விஷத்துக்கு உண்டா?"

"உண்டு...." என்ற டாக்டர் ஈசுவரன் உடனே, "மஞ்சுளா, இந்த விபரீதமான எண்ணத்தை நீ மாற்றிக் கொள்ளுவாய் என்று நம்புகிறேன்" என்றார்.

"முடியாது...."

"அப்படியானால் உன் தகப்பனாரின் உடல் பிரேதப் பரிசோதனைக்கு உட்பட வேண்டும் என்று நினைக்கிறாயா?"

"ஆமாம்...."

"அதை நீ விரும்புகிறாயா?"

"ஆமாம்...."

அந்த அறையில் அதன் பிறகு ஒரு பயங்கர அமைதி நிலவியது. யாரும் பேசவில்லை. கோகிலாவின் விம்மலும் அழுகையும்கூட நின்று வெகுநேரமாகி விட்டன. அவள் சிலையாகி மஞ்சுளாவையே பார்த்துக் கொண்டிருந்தாள். டாக்டர் ரகுநாத்தும் ஸ்தம்பித்துப் போய் — ஆனால் ஒருவித குரோத, விரோத உணர்ச்சியோடு மஞ்சுளாவைப் பார்த்துக் கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தார்.

அப்படி எல்லாருக்கும் ஒரு காட்சிப் பொருளாக அங்கு நிற்க விரும்பாத மஞ்சுளா, "வாருங்கள், சேகர்....." என்று அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வெளியே விரைந்தாள். டாக்ஸியில் ஏறி அமர்ந்து கொண்டு அதை ஸ்டார்ட் செய்தாள். கோபால் பின்சீட்டில் ஏறி அமர்வதற்குள் ஓர் அசாதாரணமான வேகத்துடன் வண்டியை ஸ்டார்ட் செய்து கிளப்பி வேகமாக ஓடித்து ஓட்டினாள், வேப்ப மரத்துப் பங்களாவின் பக்கம்.

வேப்ப மரத்துப் பங்களாவின் வாசலில் வண்டி போய் நின்றதும் தாவிக் குதித்துக் கீழே இறங்கி ஓடினாள் மஞ்சுளா. பங்களாவின் வாசல் கதவு மூடித் தாளிட்டிருப்பது டாக்ஸியின் 'ஹெட்லைட்' வெளிச்சத்தில் நன்றாகத் தெரிந்தது.

"காளியப்பா!" குரலில் ஒருவிதத் தவிப்போடு அழைத்தாள் மஞ்சுளா.

பதில் இல்லை..... ஒரே அமைதி.

சேகர் டாக்ஸியிலிருந்து இறங்கிப் பங்களாவின் பக்கவாட்டில் சிறிது தூரம் சென்று வீட்டின் பக்கக் கதவைத் தட்டித் திறக்கச் செய்யலாம் என்று எண்ணினான். மஞ்சுளாவும் அவனைத் தொடர்ந்து அங்கு விரைந்தாள்.

சேகர் கதவில் கையை வைத்தான். அது தாளிட்டிருக்கும் என்ற நினைப்பில் சற்றுப் பலமாகவே தட்ட முனைந்த போது அவன் நிலைதடுமாறிப் போனான். காரணம் அந்தக் கதவு தாளிடப்படவில்லை. கைபட்டதும் அகலத் திறந்து கொண்டது.

விலகிய கதவை விசாலமாகத் திறந்து விட்டான் சேகர். இருள் பரந்து, விரிந்து வழிந்து கிடந்தது.

"காளியப்பா.... காளி...! நாங்கள் திரும்பி வந்து விட்டோம்...." என்று அந்தகாரத்தை நோக்கிக் கூவினாள் மஞ்சுளா. ஆனால் அவள் குரலுக்கு எவ்விதமான வரவேற்புமில்லை.

காளியப்பன் எங்கே போனான்?

என்ன ஆனான்? (தொடரும்)

# ஒரே இனம்: ஒரே மக்கள்



"ஒரே கொடியின் கீழுள்ள ஒரே நாட்டு மக்களிடையே நிறைய ஒற்றுமை இருக்கிறது. நாட்டின் மீது ஒன்றாக மெய்ப்பற்றுக் கொண்டு, இந்தியா ஒரே நாடு என்று நம்புகிறவர்களிடம் சிறுபான்மையோர் அல்லது பெரும்பான்மையோர் என்னும் பிரச்சினையே எழ முடியாது. எல்லோரும் சமமான சலுகைக்கும் சமமாக நடத்தப் படுவதற்கும் உரிமை உடையவர்கள். நமது கருத்திற்கிசைந்த நாடு, அதன் ஒவ்வொரு அங்கமான பிரதேசங்களுக்கிடையே முற்றிலும் ஒற்றுமையுள்ள மதச்சார்பற்றதாயிருக்க வேண்டும்; குடியரசு நாடாகவும் இருக்க வேண்டும்."— மகாத்மா காந்தி






இண்டியன் ஆக்ஸிஜென் லிமிடெட

இரவு மணி ஒன்பதுக்குமேல் இருக்கும். ரேடியோகிராமை நிறுத்திவிட்டு அவளுடைய தனி அறைக்குள் நுழைந்தாள் நிர்மலா. நீண்டு வளர்ந்த வாளிப்பான தேகம். வசதியும் வாய்ப்பும் அவளுடைய அங்கத்தின் ஒவ்வோர் அங்குலத்தையும் அழகு செய்திருந்தன, ஊதா நிற விளக்கு வெளிச்சத்தில். அவள் திருமணம் ஆனவள்தான். ஆனால் இப்போது ?

அவளுக்குப் பின்னே யாரோ வரும் அரவம் கேட்டுத் திரும்பினாள். யாரோ என்ன, அவளுடைய தந்தை ரெங்கேசம்தான் வந்து கொண்டிருந்தார்.

வெறிச்சோடிக் கிடந்த அறையின் ஒரு மூலையில் இருந்த சாய்வு நாற்காலியில் அமுந்தினாற் போல் உட்கார்ந்தாள் நிர்மலா. என்னதான் அவள் கண்ணைக்கவரும் வண்ணச்சித்திரமாகக் காட்சி தந்தாலும், இலேசாகத் தூசி படிந்த ஓவியம் போல் அவளுடைய முகம் மட்டும் கொஞ்சம் கவலை தோய்ந்து காணப்பட்டது.

ரங்கேசம் களையில்லாமல் சொன்னார் : ''நிர்மலா! நான் அடிக்கடி கேட்கிறேனே என்று தப்பாக எடுத்துக் கொள்ளாதே. இன்று சாயங்காலம் நீ சமூக சேவை செய்ய வெளியே போனாயல்லவா, பின்னாலேயே பாலு வந்திருந்தார். டாக்டர் நரேந்திரன் முடிவான பதிலைக் கேட்டு அனுப்பினாராம். ஏதோ யோசிக்கச் சொல்லம்மா. நீ அறியாத தெரியாத பொண்ணு இல்லே. படிச்சவ. நல்லது கெட்டது தெரிஞ்சவ. நான் உனக்கு அறிவுரை சொல்லலேம்மா, ஓர் ஆலோசனையாச் சொல்றேன். பெத்தவன் இல்லையா? நீ சந்தோஷமா இருக்கணும் என்கிறது ஒண்ணுதான் என் குறிக்கோள். மறுமணத்துக்கு உனக்கு உடன்பாடா இல்லையாம்மா, அதைச் சொல்லிவிடு. டாக்டருக்கு முடிவான பதிலைத் தந்துவிடுவோம்!'' ரங்கேசத்தின் குரல் கம்மிற்று. கண்கள் பனித்தன. ஏதோ செய்யக் கூடாத, அல்லது நினைக்கவே அஞ்சும் பயங்கரக் காரியத்தைத் தம் சுயநலத்துக்காகத் தம் மகளையே செய்யத் தூண்டுவதாக ஓர் அச்சம் அவருள் ஏற்பட்டது.

முடிவான பதில் ஒன்றும் சொல்லாமல் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள் நிர்மலா: ''நானேக்குச் சொல்லிவிடலாம்ப்பா!'' வாயினின்று வார்த்தைகள் வர மறுத்தன. எந்த விதமான முடிவு எடுத்தாலும் தவறு செய்து விடுவோமோ என்று நிர்மலா பயந்தது அவளுடைய குரல் ஒலியில் நன்றாகத் தெரிந்தது.

அதைப் புரிந்து கொண்ட ரெங்கேசம் அவளுக்காக அனுதாபப்பட்டார்: ''ம்... ஒரு வருஷமாகத்தான் முடிவு சொல்றே... நானேக்குத்தான் சொல்லிவிடப் போகிறயாக்கும்!'' திரும்பி மெல்ல நடந்தார்.

நிர்மலா மெல்லக் கண்ணை ஓட்டினாள். பக்கத்தில் இருந்த மேசையில் திறந்த நிலையில் ஒரு கடிதம் கிடந்தது. எடுத்துப் பார்த்தாள். பத்து நாட்களுக்கு முன்னே அவளுடைய சிநேகிதி லண்டனிலிருந்து எழுதிய கடிதம் அது. ஆங்கிலத்தில் மணி மணியாக எழுதியிருந்தாள் அந்த வெள்ளைக்கார மாது. மீண்



டும் ஒரு முறை அந்தக் கடிதத்தைப் படித்தாள் நிர்மலா:

லண்டன்,
1—6—70

அன்புள்ள நிர்மலாவுக்கு,

நான் சென்னையிலிருந்து மூன்று மாத விடுமுறையில் இங்கு வந்தது உனக்குத் தெரியும். விடுமுறை முடியப் போகிறது.

அடுத்த வார இறுதியில் சென்னை வர இருக்கிறேன். இந்த வாரமே வருவதாக இருந்தேன். விமானத்தில் ரிசர்வேஷன் கிடைக்கவில்லை. வந்ததும் உன்னைச் சந்திப்பேன். எனக்கும் என் கணவருக்கும் நான்கு ஆண்டுகளுக்கு முன்னே மண முறிவு ஏற்பட்டது உனக்குத் தெரியும். நான் உன்னை மீண்டும் சந்திக்கும்போது, என்னைப் பார்த்து, அல்லது 'எங்களை'ப் பார்த்து, நீ ஆச்சரியப்படுவாய், அல்லது அதிர்ந்து போவாய்! மற்றவை 'சஸ்பென்ஸ்'. நேரில் சொல்கிறேன். உன் அழகுக் கன்னத்தில் என் இனிய முத்தங்கள்.

உன்னுடைய தகப்பனார் மிஸ்டர் ரெங்கேசத்தை நான் கேட்டதாகச் சொல்லு.

உன் உடன் பிறவாச் சகோதரி
கோல்ட்வின்

பின்குறிப்பு: என்னுடைய விவகாரத்திலேயே இருந்து விட்டேன்; உன்னுடைய பிரச்னைகள் என்னவாயின? அறிய ஆவல்.

'ம்... என்னுடைய பிரச்னைகள் இப்போது தீருமா? மண்டையோடுதான் மடியும்!' அலுத்துக் கொண்டாள் நிர்மலா. ஏதோ அவளுக்குத் திருமணம் ஆகி ஐம்பது வருடங்கள் ஆகியிருக்கும் போல் அவளுக்குத் தோன்றியது. ஆனால், ஆறு வருடங்கள்கூட இன்னும் முழுவதாக முடியவில்லை. அதற்குள் வாழ்க்கை அலுப்புத் தட்டிவிட்டது. அப்படி என்னதான் நடந்துவிட்டது நடுவிலே? நடந்து முடிந்த நிகழ்ச்சிகளிலே நிர்மலாவின் மனம் அவலச் சுவையோடு நடை போட்டது.....

முதன் முதலாக அர்த்தநாரி அவளைப் பெண் பார்க்க வந்த நிகழ்ச்சி அவளுக்கு நன்றாக நினைவில் இருந்தது. அப்போது அவளுடைய தாயார் உயிரோடு இருந்தாள். அர்த்தநாரி ஒரு பெரிய விமானக் கம்பெனியில் அதிகாரியாக இருந்தான். அவன்

# நாளைக்குச் சொல்கிறேன்

வேலை செய்துதான் சம்பாதிக்க வேண்டும் என்று இல்லை. சொத்து சுகம் எல்லாம் சென்னையிலேயே இருந்தன. ஏதோ பொழுதுபோக்குக்காக வேலைக்குப் போய் வந்து கொண்டிருந்தான் என்று தரகர் சொல்லியிருந்தார். ரெங்கேசத்துக்குப் பையனைப் பார்த்தவுடன் முதல் பார்வையிலேயே பிடித்து விட்டது.

திருமணத்தில் லௌகிகக் குறைகள் ஒன்றும் வைக்கவில்லை ரெங்கேசம். மூன்று நாட்கள் கல்யாணம் பிரமாதமாகச் செய்து வைத்தார்.

திருமணமாகி ஓராண்டு வரையில் எல்லாம் நன்றாகவே இருந்தது. நிர்மலாவும் அர்த்தநாரியும் தேன் நிலவுக்குக் காஷ்மீருக்குச் சென்று வந்தனர். அதற்குப் பிறகுதான் அவர்களது இல்லற வீணையில் சுருதி பேதம் தட்ட ஆரம்பித்தது.

கம்பெனி வேலை, கம்பெனி வேலை என்று அடிக்கடி கல்கத்தா, பம்பாய், டெல்லி என்று போய் வந்தான் அர்த்தநாரி. நிறையப் பணத்தைக் குதிரைப் பந்தயத்தில் இழந்து வந்தான் என்றும் நிர்மலா அறிந்தாள். வீட்டுக்கும் இரவு வெகுநேரம் கழித்து வரத் தலைப்பட்டான். பல முறை நிர்மலா ஜாடைமாடையாகவும் நேரிடையாகச் சொல்லியும் அவன் திருந்துவதாகக் காணோம். ஒன்று மட்டும் நிர்மலாவுக்கு நிச்சயமாகத் தெரிந்திருந்தது. அவன் பகலெல்லாம் எங்காவது சுற்றிவிட்டு வந்தாலும் இரவெல்லாம் அவன் அவளுடையவன்தான்!

அழகிரி விசுவநாதன்

## மலருக்கு மரியாதை!

ஸ்காட்லாந்து நாட்டுக்கு திஸில் புதரின் பூவே தேசிய மலராகும்.

முட்கள் நிறைந்த இந்தப் புதரின் பூவுக்கு இத்தனை மதிப்பு எப்படி வந்தது? பிரிட்டிஷ் தீவுகளின் மீது டேனிஷ்காரர்கள் அடிக்கடி படையெடுத்து வந்து துன்புறுத்தினர்.

ஒரு நாள் இரவு கடல் வழியாக வந்த அவர்கள் பதுங்கிப் பதுங்கி உள் நாட்டில் புகுந்தார்கள். அவர்களை எதிர்க்க வந்த ஸ்காட்லாந்து தளபதியும் படையினரும் வெகு தூரம் நடந்த களைப்பினால் தூங்கி விட்டார்கள். தங்கள் ஒற்றர்கள் மூலம் டேனிஷ்காரர்கள் இதை அறிந்தனர். தூக்கத்தில் ஆழ்ந்துள்ள எதிரிகளை விழிக்க ஓசைப்படுத்தாமல் முன்னேறினார்கள்.

டேனிஷ்காரர்களில் முன்னால் வந்த படை வீரர்கள் சிலர் திஸில் புதர்களின் மீது காலை வைத்துவிட்டனர். அவ்வளவுதான்; தம்மையும் அறியாமலே 'ஓ' என்று அலறி விட்டனர். அடுத்த கணம் ஸ்காட்லாந்து படை வீரர்களெல்லாம் விழித்து, எழுந்து திடுதிடுவென்று போருக்கு ஆயத்தமாகி விட்டார்கள். அதோடு மட்டுமல்ல; கொள்ளையடிக்க வந்த டேனிஷ்காரர்களைத் தோல்வியடையச் செய்து வீழ்த்தினார்கள். தங்களுக்கு விழிப்பூட்டிய திஸில் புதரின் மலரை ஸ்காட்லாந்து நாட்டினர் தேசிய மலராக்கிக் கொண்டார்கள்.

(ஸ்காட்லாந்து நாடோடிக் கதை)

---

அர்த்தநாரி ஓர் இலட்சியக் கணவன் என்பது போய் ஒரு சராசரி புருஷனுக்கும் கீழ்ப்பட்டவன் என்று நினைக்க ஆரம்பித்தாள் நிர்மலா. அவனுடைய பேச்சுக்கும் அவனுக்கும் கொடுத்து வந்த மரியாதையைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொண்டு வந்தாள். இறுதியாக, காரணத்தோடு அவன் மேல் வளர்ந்த வெறுப்பு, காரணமில்லாமலும் அவன் மேல் வளர்ந்து அவன் முகத்தை நேருக்கு நேர் பார்க்கவே கஷ்டப்பட்டாள் நிர்மலா.

இவற்றுக்கெல்லாம் முற்றுப்புள்ளி வைப்பது போன்ற அந்த நிகழ்ச்சி அன்றுதான் நடந்தது.

மத்தியானம் குளியலறைக்குச் செல்லு முன் வைர நெக்லேஸைக் கழற்றிப் பீரோவில் வைத்துவிட்டுப் போனாள் நிர்மலா. சாதாரணமாகப் பீரோவை யெல்லாம் அடிக்கடி பூட்ட மாட்டாள். இரவில் பூட்டினால் பெரிய காரியம். குளித்துவிட்டுத் திரும்பி வந்து பார்க்கும் போது நெக்லேஸைக் காணவில்லை.

இரவு இரண்டு மணிக்குப் பங்களாவுக்கு வந்து சேர்ந்த அர்த்தநாரியின் பையிலிருந்து ஒரு பாங்கின் அடகுச் சீட்டு கீழே விழுந்தது.

நிர்மலா கேட்டாள்: "நெக்லேஸை நீங்கள் எடுத்தீர்களா?"

"வட்டிக் கடையில் பத்திரமாக இருக்கிறது!" — இது அர்த்தநாரி.

"பணத்துக்கு என்ன அவசரம்?"

"சொல்லித்தான் ஆக வேண்டுமோ?"

"கணவன் மனைவி என்றால் தெரிந்து கொள்வதில் தவறில்லையே!"

"இந்திரா நகரில் ஒரு 'பிளாட்' சொல்லி வைத்தேன் இல்லையா? அது கைக்கு வந்தது. நெக்லேஸை வைத்துப் பணம் வாங்கிக் கொடுத்தேன்!"

"அதைக் கேட்டு வாங்கிக் கொண்டு போயிருந்தால் நாகரிகமாக இருந்திருக்கும்!"

"அப்படியென்றால் என்னைக் காட்டுமிராண்டி என்கிறாயா?"

"இல்லை, பொய்யர் என்கிறேன்...இந்திரா நகர் பிளாட்டுக்குத்தான் என்னுடைய அப்பாவி அப்பா பத்தாயிரம் கொடுத்தாரே?"

"இது.... இது....."

"குதிரையின் வாயில் கட்டிவிட்டீர்களோ? சொந்த மனைவியிடம் திருடுவதற்கு வெட்கமாக இல்லை?"

"நிர்மலா நாக்கை அடக்கிப் பேசு!"

"பேசாவிட்டால்...? யூ சீப், திருடா...."

கன்னத்திலும் முகத்திலுமாக அடித்துத் தீர்த்தான் அர்த்தநாரி. அதுவரையில் அவன் நிர்மலாவைக் கைநீட்டியதில்லை. அன்று எக்கச்சக்கமாக நிலைமை போய்விட்டது. துணிமணிகள்கூட ஒன்றையும் எடுக்காமல் தகப்பனார் வீட்டுக்கு அர்த்தராத்திரியில் வந்தவள் தான். அதற்குப் பிறகு அர்த்தநாரியின் முகத்தில்கூட விழிக்கவில்லை.

கடைசியாக மணவிலக்குப் பெறுவது என்ற முடிவுடன் வழக்கறிஞரை அணுகினாள் நிர்மலா. ரெங்கேசம் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்: "கல்யாணம் என்பது ஆயிரங் காலத்துப் பயிர் அம்மா. அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வராதே. இன்னும் அர்த்தநாரியுடன் ஒத்துப் போக முயன்று பார். ஒருவர் பொறுமையுடன் நடந்து கொண்டால் இருவர் நட்பாடலாம் என்பது தெரியாத விஷயமா உனக்கு? மணவிலக்குப் பெற்று விட்டால் மீண்டும் வாழ்வு வருமா அம்மா? கொஞ்சம் பொறுத்துப் போங்கதேன். இல்வாழ்க்கைங்கறது பெண்களுக்குக் கண்ணாடிப் பாத்திரம் மாதிரி அம்மா, உடைஞ்சு போயிட்டால் பிறகு ஒட்ட வைக்க முடியுமா?"

"அப்பா, என்னுடைய முடிவைத் திண்ணமாகச் சொல்லிடறேன்... இனிமேல் அவரோட என்றும் ஒத்து வாழ முடியாது. இங்கேயும் வர வேண்டாம்னு சொல்லிட்டீங்க. சரி, நான் தற்கொலை செய்துகிட்டாவது இந்த உலகத்தைவிட்டு ஒழிஞ்சு போகிறேன்!"

"நிர்மலா! மகளே, என்ன வார்த்தை சொன்னாய்? தற்கொலையா? வேண்டாம்.... வேண்டாம்...... ஆனால், நீ தற்கொலை என்கிற அளவுக்கு யோசித்து ஒரு முடிவுக்கு வந்துட்டேன்னு, சரி—டைவோர்ஸ்—மணவிலக்கு...வாங்கிடலாம். எனக்குத் தெரிஞ்ச பெரிய பெரிய வக்கீலெல்லாம் இருக்காங்க. வானத்தை வில்லா வளைப்பாங்க. ஒரு பெண்ணை வாழ வைக்கத்தான் அவங்களுக்குக் கொஞ்சம் கஷ்டமாக இருக்கும்! இது கூடவா முடியாது? டைவோர்ஸ் — மணவிலக்கு அதாவது மண, மண முறிவு....

ரொம்ப சுலபம்.....'' ஏதேதோ உளறிக் கொண்டு மயங்கி விழுந்தார் ரெங்கேசம்.

அவர் மீண்டும் எழுவதற்கு ஒரு வாரம் பிடித்தது.

'டெம்பரமெண்டல் இன்கம்பாடிபிலிடி' (Temperamental Incompatibility) என்ற தலைப்பின் கீழ் நிர்மலா மணவிலக்குக் கோரினாள். டிகிரியும் கிடைத்து விட்டது. அதற்குப் பிறகுதான் அவளுக்கு வாழ்வே சூன்யமாய், அர்த்தமற்றதாய், வெறும் வெளியாய்ப் போனதாகத் தென்பட்டது.

நிர்மலா சோர்ந்திருந்த அந்த நேரத்தில் தான், பக்கத்துப் பங்களாவுக்கு நரேந்தர் வந்து சேர்ந்தான், 'டாக்டர் ஆர். கே. நரேந்தர், மனோதத்துவ நிபுணர்' என்ற பித்தளைப் பெயர்ப் பலகையை மாட்டிக் கொண்டு.

ஒரு முறை நிர்மலாவுக்குக் கடுமையான காய்ச்சல் வந்து போனது. வந்து போன காய்ச்சல் நிர்மலாவுக்கும் நரேந்தருக்கும் ஓர் அறிமுகத்தை ஏற்படுத்திவிட்டுச் சென்றது. மனோதத்துவம் பயின்ற டாக்டர் நரேந்தர் நிர்மலாவின் மனத்தைச் சிரமமில்லாமல் புரிந்து கொண்டதில் வியப்பொன்றுமில்லை. பழக்கம் இறுகி, மனம் ஒன்றை ஒன்று பற்றத் துடித்தது.

அன்றும் அப்படித்தான் இருவரும் நிர்மலா வீட்டுத் தோட்டத்துப் புல்வெளியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். நிர்மலா கன்னங் குழியக் கேட்டாள்: ''நரேன்! நான் கேட்கிறேன் என்று கோபித்துக் கொள்ளாதீர்கள், உங்களுக்கு வயதோ நாற்பத்தொன்று என்கிறார்கள், பார்த்தால் முப்பத்தொன்று மாதிரி இருக்கிறீர்களே, 'காயகல்பம்' அது, இது என்கிறார்களே, அதைப் போல் ஏதாவது மாத்திரை கண்டு பிடித்து வைத்திருக்கிறீர்களோ ?''

'' அப்படி யெல்லாம் ஒன்றுமில்லை நிர்மல், இந்தப் பங்களாவுக்குக் குடிவந்த பிறகுதான் அந்த மாதிரி ஒரு மாத்திரையைக் கண்டுபிடிக்க வேண்டிய அவசியம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது !''

''பேச்சைப் பார், அப்படி யென்றால் இத்தனை நாட்கள் ஏன் திருமணமே செய்து கொள்ளாமல் இருந்தீர்களாம்!''

''எனக்குத் தகுந்த 'பேஷண்ட்' — நிர்மலா — கிடைக்க வேண்டாமா? அதற்காகத் தான்!'' — அருகே இருந்த நிர்மலாவின் மென் விரல்களை மெல்ல வருடினான் நரேந்தர். அந்த ஸ்பரிசம் ஒரு கணம் இதமாகத்தான் இருந்தது. மறு கணத்தில் நிர்மலா தன்னை உணர்ந்தாள். விருட்டென்று எழுந்து உள்ளே சென்றாள். நரேந்தருக்கு என்னவோ போல் ஆகிவிட்டது. தவறிவிட்டோமோ என்று அஞ்சினான். எழுந்து அவனுடைய பங்களாவுக்குச் சென்றான். நிர்மலாவுக்கு மறு மணத்தில் விருப்பு இல்லையோ என்று ஐயுற்றான். எப்படியும் நிர்மலாவைச் சரியாகவே புரிந்து கொள்ள முடியவில்லை அவனால். அவன் குழம்பியிருந்த நேரத்தில்தான் நிர்மலா வீட்டு வேலைக்காரச் சிறுமி, ''அம்மா கொடுத்துட்டு வரச் சொன்னாங்க'' என்றோர் உறை



## அர்த்தமில்லாமலா போகும் ?

யேசுவின் சீடர்கள் சிலரின் பெயர்கள் சிலவற்றின் அர்த்தம்:

'இயேசு': மக்களைப் பாவக் கட்டுகளினின்றும் மீட்பவர்.

'ஜான்': ஆண்டவன் தந்த அருள் கொடை.

'பீட்டர்': கிரேக்க மொழியில் 'பீட்டர்' என்றால் பாறையைக் குறிக்கும். பாறை போன்ற உறுதியான நெஞ்சு படைத்தவர் பீட்டர். கடவுளுறுதியும் கொண்டவர்.

## நல்ல கடவுள்

இயேசுநாதர் சிலுவையில் அறையப்பட்ட நாளைப் பெரிய வெள்ளி எனக் கூறுகிறோம். ஆங்கில மொழியில் இந்நாளுக்கு வழங்கும் பெயர் 'நல்ல வெள்ளி' (Good Friday) யாகும்.

நல்ல வெள்ளி என்ற பெயர் இந்நாளுக்கு எப்படிப் பொருந்தும்?

ஆங்கிலத்தில் நல்லது (Good) என்னும் சொல், நன்மையானவைகளுக்குக் காரணமான கடவுள் (God) என்ற சொல்லிலிருந்து பிறந்தது. ஆகவே இந்நாள் கடவுளின் நாள். (God Friday) என்பதே 'நல்ல வெள்ளி' (Good Friday) ஆயிற்று.

- தகவல்: பி. வி. கி.

ஆதாரம்: 'சிலுவை மொழிச் சிந்தனை'

யைக் கொடுத்துச் சென்றாள். ஆவலுடன் பிரித்துப் படித்தான். 'நாளைக்குச் சொல்கிறேன்' என்று மட்டும் இருந்தது. கை எழுத்து ஒன்றும் காணவில்லை. ஒரு துண்டுக் காகிதத்தில் பென்சிலால் கிறுக்கப்பட்டிருந்தது. அந்த வாசகம் நரேந்தருக்குத் தெம்பையும் தைரியத்தையும் கொடுத்தது.

'நாளைக்குச் சொல்கிறேன்' என்றவள் இரண்டு மாதங்களாகியும் ஒரு முடிவான பதிலை நரேந்தருக்குச் சொல்லவில்லை.

நிர்மலாவின் தாமதத்தினால் டாக்டர் நரேந்தர் அயர்ந்து போய், தனது நண்பன் பாபுவை விட்டு ரெங்கேசத்தையே கேட்கச் சொன்னான். ரெங்கேசம் கொஞ்சம் பழமைப் பிடிப்புள்ளவர். ஆனாலும் மகளின் வாழ்க்கை மீண்டும் மலர வேண்டும் என்ற எண்ணத்தில் மறுமணத்துக்கு உடன்பட்டார். ஆனால் நிர்மலாவுக்கு ஆர்வம் இருந்தாலும் துணிவில்லாமல் தட்டிக் கழித்துக் கொண்டே வந்தாள்.

சிந்தனையில் மூழ்கி யிருந்த நிர்மலாவின் காதில் 'ஆர்போ ரூமேரூபோ' என்ற சத்தம் 'அடிட் ருமுவுளி'யிருந்து கேட்டது. அது நிர்மலாவுக்கு வாடிக்கையான நிகழ்ச்சி. சமையல்காரி வேதத்துடன் கணவன் முத்து

சாமி இரவு பத்து மணிக்கு மேல்தான் வருவான். வரும்போதே குடி போதையில் தள்ளாடித் தடுமாறித்தான் வருவான். வந்தவுடன் முதல் பூஜை வேதத்துக்குத்தான்... குத்து, அடி, உதை யெல்லாம் கிடைக்கும். வேதமும் வாய்க்கு வந்ததை யெல்லாம் சொல்லித் திட்டுவாள். ஒரே ரகளைதான். நிர்மலா எத்தனையோ சொல்லியும் முத்துசாமி திருந்தவில்லை. வேதத்தை வேலையிலிருந்து நிறுத்தி விடுவேன் என்று கூட மிரட்டிப் பார்த்தாள். ஒன்றும் பயனில்லை. நிர்மலா அன்றைக்கு வேதம் — முத்துசாமி விஷயத்தில் தலையிடுவதால் பயன் ஒன்றும் இருக்காது என்று நினைத்து அப்படியே அயர்வால் உறங்கி விட்டாள்.

மீண்டும் நிர்மலாவுக்கு விழிப்பு ஏற்பட்ட போது இரவு மணி ஒன்றுக்கு மேல் இருக்கும். 'அவுட் ஹவு'ஸிலிருந்து விசித்திரமான சப்த ஜாலங்கள் எல்லாம் ஒலி செய்து கொண்டிருந்தன. வேதம் 'களுக்'கென்று சிரிக்கும் சத்தம் கேட்டது. கைவளை நொறுங்கும் ஒலிகள். 'சே, வெட்கம் கெட்ட ஜன்மங்கள், அவனிடம் நன்றாக உதை வாங்குவது பிறகு இளிப்பு! மறுநாள் காலையில் முதல் வேலையாக வேதத்துக்குச் சில அறவுரைகள் நல்க வேண்டும்' என்ற முடிவுடன் நிர்மலா உறங்கிப் போனாள்.

**வி**டிந்தது. வேதத்திடம் முதல் நாள் சண்டையைப் பற்றி விசாரித்து விட்டுச் சொன்னாள்: ''பேசாமல் வேதம், நான் சொல்றேன், கேளு. முத்துசாமியை 'டைவோர்ஸ்' பண்ணி விடு. ஏன் இப்படி அடியும் உதையும் வாங்கிக்கிட்டுக் காலம் தள்ளணும்? அவன் என்ன உனக்குச் சம்பாதித்துக் கொண்டு வந்து போடறானா? நீதானே நம்ம பங்களாவில் வேலை செய்து அவனுக்குக் கொட்டி அழறே? கல்யாணமாகி மூணு வருஷத்துக்கு மேலே ஆனாத்தான் மணவிலக்குக் கிடைக்கும். உனக்குத்தான் ஆகியிருக்குமே!''

''என்னம்மா இப்படிச் சொல்றீங்க? ஆயிரந்தான் இருந்தாலும் அவர் எனக்குப் புருஷன்தான். நான் அவருக்குப் பெண்டாட்டிதான். அவரு என்னை வெட்டிப் போட்டாக்கூட அந்த என் உடம்புத் துண்டுங்க நிலைவாசற்படிக்கு உள்ளேதான் துடிச்சிக்கிட்டுக் கிடக்கும். வெளியே வராது! கோவிலுக்குள்ளே இருந்தாத்தான் அது சாமி, வெளியே வந்துட்டா அது கல்தான், இல்லையாம்மா!'' என்ற வேதம் தாலிக் கயிற்றை எடுத்துக் கண்ணில் ஒத்திக் கொண்டாள். வேதத்துக்கு வாழ்க்கையின் மேல் இருந்த நம்பிக்கை நிர்மலாவுக்கு ஆச்சரியத்தைத் தந்தது.

அதற்குள் வாசற்புறத்தில் கார் ஒன்று வந்து நிற்கும் சத்தம் கேட்டது. நிர்மலாவும் ரெங்கேசமும் எட்டிப் பார்த்தார்கள். வெள்ளைக்கார மாது கோல்ட்வின்னும் இன்னொரு வெள்ளைக்காரரும் கணவன் — மனைவி போல் நெருங்கி நடந்தவாறு உள்ளே வந்துகொண்டிருந்தார்கள். நிர்மலா அவர்களை வரவேற்றாள். கோல்ட்வின்னும் தமிழ் முறைப்படி 'வணக்கம், வணக்கம்' என்று கைகூப்பினாள்.

ஸ்ரீமதி கோல்ட்வின் அயல் நாட்டுக் கம்பெனி ஒன்றில் சென்னைக் கிளையில் துணை நிர்வாகியாகப் பணியாற்றிக் கொண்டிருந்தாள். முன் ஒரு முறை அவர்களுடைய வீட்டுக்கு வந்திருக்கிறார்கள். அப்போது கோல்ட்வின்னின் கணவரை நிர்மலா பார்த்திருக்கிறாள். பெயர்கூட 'ரோஜர்ஸ்' என்று நினைவிருந்தது. ஆனால் அப்போது கோல்ட்வினுக்குப் பக்கத்தில் இருந்தவர் ரோஜர்ஸ் இல்லையே... கோல்ட்வின் மறுமணம் செய்து கொண்டு விட்டாளோ?

கோல்ட்வின் முந்திக்கொண்டாள்: ''ஓ, நிர்மல், மீட் மை ஹஸ்பெண்ட் மிஸ்டர் டிவைசர், கன்சல்டிங் ஆர்கிடெக்ட், ஏ அண்டு இ. பில்டிங் காண்ட்ராக்டர்ஸ்...''

டிவைசர் கைகுலுக்க வந்தார். நிர்மலா கைகூப்பினாள். நிர்மலாவுக்கு இப்போது சந்தேகமில்லாமல் புரிந்து விட்டது. ரோஜர்ஸை மணவிலக்குச் செய்துவிட்டு டிவைசரை மறுமணம் செய்து கொண்டு விட்டாள் கோல்ட்வின். சட்டையை மாற்றுவது போலவோ?...

டிவைசர் தம்பதிகள் விடைபெற்றுச் சென்று நீண்ட நேரம் ஆகியும்கூட நிர்மலா அழுது கொண்டேயிருந்தாள். கண்கள் கண்ணீர் மழையைப் பெய்து கொண்டே இருந்தன. நிர்மலாவுக்கு அவளுடைய மனத்தின் வலுவின்மை நன்றாகப் புரிந்தது. வேதத்தைப் போலப் பொறுத்தும் அவளால் வாழ இயலவில்லை. கோல்ட்வின்னைப் போல் துணிந்தும் வாழ முடியவில்லை.

பாதிக் கிணறு தாண்டியவள் கதி?

ரெங்கேசம் ஈனமான குரலில் கேட்பது மெல்ல அவளுடைய காதில் விழுகிறது. ''பாலு வந்து கேட்டால் டாக்டருக்கு என்னம்மா சொல்வது?''

''நாளைக்குச் சொல்றேன்ப்பா!''

## நெருப்பில்லாமல் சமைக்கலாம்!



ஸ்டவ், மின்சார அடுப்பு இவையெல்லாம் போய், இப்போ 'லேட்டஸ்டாக' நெருப்பே இல்லாமல் சமைக்கும் முறை வந்து விட்டது.

ஆஸ்திரேலியாவில் ஒரு ''மைக்ரோ அலை'' பாத்திரம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இந்தப் பாத்திரத்தில் உணவுப் பண்டத்தை நாம் போட்டுவிட்டால் போதும். அவை நெருப்பின் உதவியின்றித் தானே சமையலாகிவிடும். நெருப்பில்லாமல் எப்படிச் சமைக்க முடியும்? இந்த 'மைக்ரோ வேவ்' பாத்திரத்தில் பொருளை இட்டதும், இப்பாத்திரத்திலிருந்து வெளிப்படும் 'ஹை ஃப்ரீக்வன்ஸி' ரேடியோ அலைகள் உணவுப் பண்டத்தினுள் இருக்கும் அணுக்களை அசைச்செய்து, அதன் மூலம் சூடு உண்டாக்கி, பண்டத்தைச் சமைக்க உதவுகிறது!

சம்பத்குமார்

ஆதாரம்: 'இந்துஸ்தான் டைம்ஸ்'

# அடிக்கடி சிறுநீர் கழிப்பது

அடிக்கடி சிறுநீர் கழிப்பது ஒரு கொடிய வியாதி. அது, பாதிக்கப்பட்டவரை நாளுக்கு நாள் மரணப் பாதையை நோக்கி இட்டுச் செல்லும்.

இவ்வியாதியால் அல்லல்படுவோருக்கு அதிக தாகம், பசி, உடல் பூராவும் வலி ஏற்படும்; உடலால் உழைக்கவோ, அல்லது மூளையை உபயோகப்படுத்தி வேலை செய்யவோ உற்சாகமிராது. நாளுக்கு நாள் உடல் எடை குறையும். உடலில் ஒருவித நமைச்சல் ஏற்படும். சரும வியாதியால் அவதியுறுவர். கல்லீரல் மந்தமாகி, மூத்திரக் காய்கள் பலவீனமடைந்து, சரிவர இயங்காது. இந்த வியாதியை உடனடியாகக் கவனிக்காவிடில், இசிவ் வாயு, பார்வைக் குறைவு, தூக்கமின்மை, அதிகக் களைப்பு, உடலில் கட்டிகள் ஏற்படுவது போன்றவைகளால் கஷ்டப்பட நேரிடும்.

பழையகாலத்திலிருந்து அனுசரிக்கப்பட்ட யூனானி முறைப்படி, அபூர்வ மூலிகைகளினால் தயாரிக்கப்பட்ட "யூரிடோன்" மாத்திரைகள் இந்தக் கொடிய வியாதியை குணப்படுத்தும்.

"யூரிடோன்" மாத்திரைகளை உபயோகப்படுத்தி, ஆயிரக்கணக்கானவர்கள் பயன் அடைந்துள்ளனர். அடிக்கடி சிறுநீர் போவது கட்டுப்படுத்தப்பட்டு, ஒரு சில நாட்களிலேயே வியாதியின் அல்லல்களிலிருந்து நிவாரணம் அடைந்து மன நிம்மதியைப் பெறுகின்றனர்.

"யூரிடோன்" சிக்கனமானது, பத்திரமானது, எளிதில் எடுத்துச் செல்லக் கூடியது. உணவு உட்கொள்ளுவதில் விசேஷக் கட்டுப்பாடுகள் ஏதும் இல்லை. சாதாரண உடல்நலமுள்ளவர்களும் நல்ல ஆரோக்கியமாக இருக்க இதை உட்கொள்ளலாம். விவரங்கள் அடங்கிய இலவசப் பிரசுரத்துக்கு எழுதவும்.

40 மாத்திரைகள் கொண்ட பாட்டில் விலை ரூ. 10. பாக்கிங் தபால் செலவு ரூ. 2 தனி.

ஒரே தடவையில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பாட்டில்களுக்கு ஆர்டர் அனுப்புபவர்களுக்கு பாக்கிங் மற்றும் தபால் செலவு இலவசம்.

**Barrys Remedies Laboratories**
**(K. L.)**

**G. P. O. Box 874 - CALCUTTA-1**

# ஆஸ்துமா நிவாரண மூலிகை

ராஜஸ்தான் பிரபல அரசியல் சமூகத் தலைவர் காலஞ்சென்ற ஸ்ரீ சம்பூநாத் அவர்களின் பேரன் ஸ்ரீ கேசவ் மோஹன்லால் ஏழைகளுக்கு ஆஸ்துமா நிவாரண மூலிகை வினியோகிக்கிறார். ஸ்ரீ சம்பூநாத் அவர்களுக்கு இந்த மூலிகை ஒரு சந்நியாசியால் கொடுக்கப்பட்டு கடந்த 40 ஆண்டுகளாக இலவசமாக வினியோகிக்கப்பட்டது. இத்தன்னலமற்ற சேவைக்கு அரசாங்கம் உபகாரச் சம்பளம் அளித்தது. ஆனால் இந்த நற்பணியை அவர் தன் பேரனிடம் ஒப்படைத்து விட்டு துறவியானார். தற்பொழுது இப் பணியை பேரன் நடத்துவதோடு இதற்கும் பண உதவி செய்யுமாறு தனவந்தர்களைக் கேட்டுக் கொள்கிறார். மூன்று டோஸ் மருந்து சாப்பிட்டதுமே ஆஸ்துமாவினால் அவதியுறும் பலர் நிவாரணமடைந்துள்ளனர். ஆஸ்துமாவினால் அவதியுறுபவர்கள் மூலிகைக்கு கீழ்க்கண்ட விலாசத்திற்கு ஆங்கிலத்தில் எழுதவும்.

**SRI KESHAV MOHAN LAL,**

**5, Haralaldas Lane, Jorabagan Park, West**
**CALCUTTA-6 (India)**

எங்களுக்கு கிளை ஆபீஸ்கள் இல்லை

மேற்கு வங்காள சங்கங்கள் ரிஜிஸ்ட்ரேஷன் ஆக்ட் 1961 கீழ் நிறுவப்பட்ட பாபா ஸ்ரீ சம்புநாத் சேவா கேந்திராவினால் வியாதியஸ்தர்கள், டாக்டர்கள், மருத்துவர்கள் அளிக்கும் நன்கொடையின் மூலம் ஆஸ்துமாவினால் அவதியுறுபவர்களின் நலனுக்காக வெளியிடப்பட்டது.

MAA/K/70

# மூல நோயை

முற்றவிடாமல் நம்பிக்கையான

**ஹெடன்ஸா**

உபயோகித்து, நிவாரணம் அடையுங்கள்;
—ரண சிகிச்சையையும் தடுங்கள்



# பாடமும் பட்டமும்

## நாடோடி

(1)

**சிறுகதைப் பள்ளி ஆசிரியர் அவர்களுக்குச் "சிறுகதைப் பித்தன்" எழுதிக்கொள்வது :**

1–1–71

ஐயா,

என்னைப் போன்ற சிறுகதைப் பித்தர்களுக்குத் தாங்கள் தபால் மூலம் சிறுகதை எழுதச் சொல்லிக் கொடுக்க முன்வந்தது குறித்து மகிழ்கிறேன். தாங்கள் கேட்ட கட்டணம் ரூபாய் நூறுக்கு இத்துடன் செக் வைத்துள்ளேன். பெற்றுக் கொண்டு முதல் வாரப் பாடத்தை அனுப்பி வைக்கவும். தங்கள் பள்ளி மூலம் சிறந்த சிறுகதை எழுத்தாளன் ஆவேன் என்கிற நம்பிக்கையில் இப்பொழுதே சிறுகதைப் பித்தன் என்று புனைபெயர் வைத்துக் கொண்டு விட்டேன்.

"சிறுகதைப் பித்தன்"

(2)

அன்பு மிக்க ஐயா, 8–1–71

தாங்கள் அனுப்பிய முதல் வாரப் பாடம் கிடைத்தது. இன்னும் இருபத்தொன்பது வாரங்களுக்கு வாராவாரம் பாடம் அனுப்பி வைப்பதாக எழுதியுள்ளீர்கள். இந்தப் பாடத்தைப் படித்துவிட்டு ஒரு சிறுகதை எழுதி அனுப்பியுள்ளேன். அடுத்த வாரப் பாடம் அனுப்பும்போது இந்தக் கதைக்கு விமரிசனம் எழுதி அனுப்புவீர்கள் என்று எதிர் பார்க்கிறேன்.

"சிறுகதைப் பித்தன்"

(3)

15–1–71

பேரன்பு மிக்க ஐயா,

அன்று காலை எட்டு மணி இருக்கும், "சார் போஸ்ட்" என்ற குரல் கேட்கவே, விழுந்தடித்துக் கொண்டு வாசலுக்கு ஓடி வந்தேன். தங்களிடமிருந்து இரண்டாவது வாரப் பாடமும், என் கதையைப் பற்றிய விமரிசனமும் வந்திருந்தன. புதுப் பாடத்தைப் படித்து விட்டேன். இன்று ஒரு சிறுகதை எழுதி அனுப்பியுள்ளேன். இந்தக் கதைக்கு விமரிசனமும் அடுத்த வாரப் பாடமும் அனுப்பி வைக்கவும்.

"சிறுகதைப் பித்தன்"

(4)

22—1—71

அன்பு கெழுமிய ஐயா,

"முடியாது, என்னால் முடியாது" என்றேன் நான்.

"ஏன் முடியாது?" என்று கேட்டாள் என் மனைவி.

"நான் சிறுகதைப் பள்ளிக்கு இப்பொழுது ஒரு சிறு கதை எழுதி அனுப்பியாக வேண்டும். ஆகவே உன்னோடு கூட சினிமாவுக்கு வர முடியாது. நீ வேண்டுமானால் தனியாகப் போ!" என்றேன்.

இந்த வாக்குவாதத்தின் விளைவாக எழுந்ததுதான் நான் இப்பொழுது எழுதி அனுப்பியுள்ள சிறுகதை. இதைத் தாங்கள் பரிசீலனை செய்து அதைப் பற்றிய தங்கள் மேலான கருத்துக்களை எழுதி அனுப்புவதுடன், அடுத்த வாரப் பாடத்தையும் அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

"சிறுகதைப் பித்தன்"



**பெருக்க வழி!**

சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில், சுத்தமாகப் பெருக்க ஒரு கலபமான வழியைக் கையாளுகிறார்கள்.

ஈர மரத்தூளை முதலில் ஒருவர் தூவிக்கொண்டே போகிறார். இன்னொருவர் துடைப்பத்தால் பெருக்கிக் கொண்டே வருகிறார். தரையில் உள்ள தூசு அழுக்கையெல்லாம் ஈர மரத்தூள் நன்றாகத் துடைத்துக் கொண்டு வருகிறது. —கிரிஜா

(5)

29—1—71

என் மதிப்புக்கும், அன்புக்கும் பாத்திரமாகி வரும் அன்புசால் ஐயா,

அன்று இரவு பன்னிரண்டு மணி. எங்கும் இருள். எங்கும் நிசப்தம். நான் என் வீட்டின் மேல் மொட்டை மாடியில் சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண்டு, ஆகாய ரத்தினக் கம்பளத்தில் அழகுறப் பதிப்பிக்கப்பெற்றிருந்த நட்சத்திரக் கூட்டத்தில் என் மனத்தைப் பறிகொடுத்து உட்கார்ந்திருந்தேன்.

பக்கத்தில் என் இல்லாள் வெள்ளி டம்ளரில் காய்ச்சிய பசும் பாலுடன் வெகு நேரமாகக் கால் ஒடிய நிற்கிறாள் என்பதையும், அவள் என்னைத் திரும்பத் திரும்ப அன்பாக அழைத்தது என் காதில் விழவில்லை என்பதையும் பின்னர்தான் தெரிந்து கொண்டேன்.

அப்பொழுது ஒரு கரிய உருவம் என் முன்னர் தோன்றிற்று. அதைக் கண்டு பயந்து கிறீச்சென்று ஓலமிட்டாள் என் சகதர்மிணி. அவள் கையிலிருந்த வெள்ளி டம்ளர் கீழே விழ, பால் தரையில் கொட்டியது. பால் இருந்த இடத்தை நோக்கிக் கரிய உருவம் நகர்ந்தது.

அந்தக் கரிய உருவம் யார் என்று தெரிய நான் என் கையில் இருந்த டார்ச் விளக்கின் விசையை அழுக்கி, அதன் முன்னர் நீட்டினேன். எங்கள் வீட்டில் எப்பொழுதும் அடுப்பங்கரையைச் சுற்றி வளைய வரும் கறும்பூனைதான் அந்தக் கரிய உருவம் என்று தெரிய வந்ததும், நானும் என் மனைவியும் சிரித்தோம். எங்களைப் பார்த்து அந்தப் பூனை சீறியது.

"நாளைக்குச் சிறுகதை எழுதி அனுப்ப வேண்டிய நாளாச்சே! கதை எழுதாமல் இப்படி ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டு நிற்கிறீர்களே!" என்று கேட்டாள் என் அருமை மனைவி.

"கதைக்கு விஷயம் கிடைக்காததால்தான் இப்படி ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டு நிற்கிறேன்" என்று சொல்ல ஆரம்பித்தவன் தேள் கொட்டியவன் போலக் கைகளை உதறினேன்.

"என்ன! என்ன!" என்று பதறினாள் என் மனைவி.

"கதைக்கு விஷயம் கிடைக்கவில்லை என்று சொன்னேனே! அதுதான் கிடைத்து விட்டதே! இப்பொழுது நடந்த நிகழ்ச்சியைக் 'கறும் பூனை' என்கிற தலைப்பில் கதையாக எழுதி அனுப்பி விடுகிறேன். நீ தூங்கப் போ. நான் கதையை எழுதி முடித்துவிட்டுத் தூங்குகிறேன்" என்றேன்.

இந்தச் சூழ்நிலையில் பிறந்ததுதான் 'கறும் பூனை' என்னும் இந்தக் கதை, இப்பொழுது நான் தங்கள் பார்வைக்கு அனுப்பிக்கொண்டிருப்பது. ஆனால் நான் கறும் பூனை என்று குறிப்பிட்டது நிஜக் கறும் பூனையையா, அல்லது என் மனைவியையா என்று சந்தேகப்படும்படி கதையின் முடிவு அமைந்து விட்டது. அதைப் பற்றித் தங்கள் மேன்மையான கருத்துக்களை எழுதி அனுப்புவதுடன், அடுத்த வாரப் பாடமும் அனுப்பி வைக்கும்படி அன்புடன் விழையும்,

"சிறுகதைப் பித்தன்"

5—2—71

"சிறுகதைப் பித்தன்" அவர்களுக்குச் சிறுகதைப் பள்ளி ஆசிரியர் எழுதிக் கொண்டது:

ஐயா,

தங்கள் 'கறும் பூனை' கதை கிடைத்தது. முடிவைக் குழப்பமாக அமைப்பதுதான் தற்காலத்திய சிறுகதை "பேஷன்". ஆகவே அதுபற்றிக் கவலைப்பட வேண்டாம்.

அடுத்த வாரப் பாடம் அனுப்பி வைக்கவில்லை. இனி ஒரு பாடமும் தங்களைத் தேடி வராது.

மூன்று வாரங்களிலேயே தாங்கள் சிறுகதை மன்னன் என்று நிரூபித்து விட்டீர்கள். ஆகவே, "சிறுகதை மன்னன்" என்கிற பட்டத்தை எங்கள் பள்ளியின் சார்பாகத் தங்களுக்கு அளிக்கிறேன்.

அந்தப் புனைபெயரில் நிறைய கதைகள் எழுதிப் புகழுடன் விளங்குவீர்கள் என்று நம்பும்,

சிறுகதைப் பள்ளி ஆசிரியர்



PORTLAND CEMENT
ACC
20 BAGS TO A TONNE

# கடிதம் கிழிந்தது

ஜோதிர்லதா கிரிஜா

காயத்ரி அந்த அறையின் கதவைச் சாத்தி விட்டுப் பெரிய கண்ணாடியின் முன் நின்று தன்னைத் தானே நன்றாகப் பார்த்துக் கொண்டாள். தனக்கு முன் பின் தெரியாத ஒருத்தியின் அழகை ஆராய்வது போன்ற தன் செய்கையில் ததும்பிய கிறுக்குத்தனத்தை நினைத்து அவள் உள்ளுக்குள் நகைத்துக் கொள்ளவும் செய்தாள்.

'என் அழகுக்கு என்ன குறைச்சலாம்? கருகருவென்று அடர்த்தியாக இருக்கும் சுருண்ட கூந்தல் பின்னும்போது கைக்கு அடங்காததால் கை வலிக்கிறதென்று அம்மா எத்தனை தடவை அலுத்துக் கொண்டிருக்கிறாள்!'

தலைப் பின்னலை எடுத்து முன்னால் போட்டுக்கொண்டு அவள் பெருமையோடு நின்றாள். 'என் கூந்தலழகு ஒன்றே போதுமே.'

அடுத்தபடி அவள் தன் கண்களை நோக்கினாள். 'அடேயப்பா, என் கண்களுக்கு இருக்கிற அழகு வேறு யாருடைய கண்களுக்கு வரும்? கருமையான என் விழிகளின் ஒளியை அடர்த்தியான புருவங்கள் என்னமாய் எடுத்துக் காட்டுகின்றன! இருட்டிலே மின்மினிப் பூச்சியின் வெளிச்சம் பளிச்சென்று தெரிகிற மாதிரி... ரொம்ப உயரமாயிருக்கிற பெண்களிடம் காணப்படுகிற ஆண்பிள்ளைத்தனம் என்னிடமில்லை. ஏனென்றால் நான் நடுத்தர உயரம்தான். ஊளைச் சதை போடாத என் உடம்பு அளவான வாளிப்போடு எவ்வளவு ஆரோக்கியமாக இருக்கிறது! மூக்கும் முழியுமாய் நான்தான் எவ்வளவு அழகாயிருக்கிறேன்! மொத்தத்தில் எனக்கென்ன குறைச்சல்?' — சட்டென்று அவள் முகம் வாடி, கண்களில் கண்ணீர் ததும்பிற்று.

'எல்லாமிருந்தும் என்ன பயன்? நான் கறுப்பு. அட்டைக் கரி... தொட்டால் ஒட்டிக் கொள்கிற கறுப்பு...'

தன்னை இதற்கு முன்னால் பெண் பார்க்க வந்தவர்களையெல்லாம் அவள் வரிசையாக நினைவுபடுத்திப் பார்த்தாள்.

முதன் முதலாக அவளைப் பார்க்க வந்தவன் நல்ல சிவப்பு. அவனையும் அவன் பார்த்த பார்வையையும் கவனித்ததுமே அவளுக்குப் புரிந்து விட்டது, அவன் தன்னை ஏற்கமாட்டான் என்பது. கூட வந்திருந்த பெரியவர் பையனின் காதைக் கடித்துவிட்டு, காயத்ரி நல்ல அழகுதான் என்றும், ஆனால் மிகவும் கறுப்பா யிருப்பதால் பையனுக்குப் பிடிக்கவில்லை என்பதையும் ஒளிவுமறைவில்லாமல் தெரிவித்து விட்டார். காயத்ரிக்கு வருத்தமாக இருந்தாலும், அதிர்ச்சியாக இல்லை. உண்மையைச் சொல்லப் போனால் அவன் சம்மதித்திருந்தால்தான் அவள் அதிர்ச்சி அடைந்திருப்பாள். 'ஊருக்குப் போய்க் கடிதம் எழுதுவதாக'க் கதைக்காமல், உண்மையைச் சொல்லிவிட்டு அவர்கள் போனதால் கடிதம் வரும்வரையில் தன்னைப் பாதிக்கக் கூடிய பரபரப்பிலிருந்து தான் காப்பாற்றப் பட்டதில் அவளுக்கு ஒருவகையில் மகிழ்ச்சிதான். செக்கச் செவேல் என்றிருக்கிற ஒரு மனிதன் தன் மனைவியும் தன்னைப் போல் சிவப்பாக இருக்க வேண்டும் என்று-விரும்பியதில் இருந்த நியாயம் அவளுக்குப் புரிந்தது.

இரண்டாவதாக அவளைப் பெண் பார்க்க வந்த இளைஞனின் நிறம் அவள் அதிகக் கறுப்பா அல்லது அவன் அதிகக் கறுப்பா என்று கண்டுபிடிக்க முடியாதபடி, கிட்டத்தட்ட அவளது கறுப்புக்கு ஈடு கொடுக்கும் வகையில் இருந்ததைப் பார்த்தபோது, அவன் தன்னை நிராகரிக்க மாட்டான் என்று எண்ணியவளாய் அவள் ஆறுதலுற்றாள். பையனுடன் வந்திருந்த அவன் தகப்பனார் ஊருக்குப் போய் எழுதுவதாகச் சொன்னார்.

அவர்கள் புறப்பட்டுப் போய் இரண்டு நாட்களுக்கெல்லாம் அந்தப் பையனின் தகப்பனாரிடமிருந்து கடிதம் வந்து விட்டது. 'பெண் கறுப்பாக இருப்பதால் பையனுக்குப் பிடிக்கவில்லை' என்று துளியும் நியாய உணர்வு இன்றி அவர் எழுதியிருந்ததைப் படித்த போது காயத்ரிக்குச் சீற்றத்தோடு சிரிப்பும் வந்தது.

தானும் நல்ல கறுப்புத்தான் என்பதைப் பற்றிய நினைப்பே யில்லாமல், தான் பார்த்து விட்டு வந்த ஒரு பெண்ணை, 'கறுப்பு, அதனால் பிடிக்கவில்லை' என்று சொல்லுவதைப் பார்! குறைந்தபட்ச நேர்மை உணர்வுகூட இல்லாத அவனது போக்கை நினைத்து அவள் குமைந்தாள். 'அடேயப்பா! இவன் இருக்கிற கறுப்புக்கு என்னைப் பார்த்துக் கறுப்பு என்று சொல்வதற்கு வாய் கூசவில்லையோ! தானும் அட்டைக் கரிதான் என்பதை மறந்து, 'பெண் கறுப்பு, அதனால் பிடிக்கவில்லை' என்று சொல்வதற்கு ஓர் ஆண்பிள்ளைக்கு எவ்வளவு திமிர் இருக்க வேண்டும்?' — நினைக்க நினைக்க, காயத்ரியின் ஆத்திரம் அளவு கடந்தது.

அதற்குப் பின்னர் அவளைப் பார்க்க வந்த இருவரும் கூட அவள் கறுப்பு என்பதாலேயே ஏற்க மறுத்துச் சென்றார்கள். இதற்கிடையில் கறுப்புப் பெண்களைக் கல்யாணம் செய்து கொள்ளச் சொல்லிக் காஞ்சி சங்கராசாரிய சுவாமிகள் வெளியிட்ட அறிக்கையைப் பார்த்து அவளுக்குச் சிரிப்புத்தான் வந்தது. 'வரதட்சிணை விஷயத்தில் கூட அவரது கோரிக்கைக்குச் செவிசாய்க்காத இளைஞர்கள் கறுப்புப் பெண்களையாவது கல்யாணம் செய்து கொள்வதாவது!'

நாட்கள் செல்லச் செல்லப் பெற்றோர்களுக்குத் தான் ஒரு சுமையாகிப் போனதை மேலும் மேலும் உணரத் தலைப்பட்டு அவள் உள்ளூற வருந்தலானாள். படித்த படிப்பு வீண் போகாமல் ஏதாவது வேலையில் அமர்ந்து நன்றாளான உதவியைப் பெற்றோருக்குச் செய்

பலாம் என்றால் அதற்கும் தங்கள் கிராமத்தில் வழியில்லாத நிலையை நொந்தபடி அவள் நாட்களைக் கடத்திக் கொண்டிருந்தாள். தன்னை விடவும் அதிக மனமுறிவுக்கு ஆளாகிக் கவலையே உருவாக வளைய வந்து கொண்டிருந்த பெற்றோரைப் பற்றி நினைக்க நினைக்க, பெண்ணாய்ப் பிறக்கக் காரணமாயிருந்த தன் தலையெழுத்தை அவள் நோகலானாள்.

இவ்வாறாகக் கடந்த ஈராண்டுகளுக்கும் மேலாக அவளைப் பெண் பார்த்துச் சென்ற ஆறு இளைஞர்களாலும் 'கறுப்பு' என்ற காரணத்தால் நிராகரிக்கப்பட்ட தன் பிறவு. அந்த நிராகரிப்பு விளைவித்த மனக் காய்ப்புக்குப் பழக்கப்பட்டுப் பழக்கப்பட்டு, அதனால் பாதிக்கப்படாதிருக்குமளவுக்கு மனம் தேறிப் பக்குவப்பட்டும் விட்ட காயத்ரி, தன்னைப் படைத்த கடவுளின் மேல் பாரத்தைப் போட்டுவிட்டு, 'ஒரு பெண்ணைப் படைத்த ஆண்டவன் அவளுக்கென்று ஓர் ஆணையும் படைத்தே இருப்பான். ஆனால் அவனைச் சந்திக்கும் வேளைதான் இன்னும் வரவில்லை' என்ற முடிவு கட்டி, அந்த முடிவால் கிடைத்த போலியான ஆறுதலில் தன் மனக் குமுறலைச் சமனப்படுத்திக் கொள்ளவும், தன் திருமணம் பற்றிய பிரச்னை குறித்து யோசித்து மண்டையைக் குழப்பிக் கொள்ளாதிருக்கவும் கற்றுக் கொண்டு அமைதியாக இருக்கலானாள்.

...இன்று ஏழாவது நபராக அவளை ஒருவன் பார்க்க வந்திருந்தான். இன்றைக்குப் பெண் பார்க்கும் படலம் தனக்குச் சாதகமாகவே இருக்கும் என்று காரண மேதுமின்றியே அவள் உள்ளுணர்வுக்குத் தோன்றிக் கொண்டு இருந்தது. நம்பிக்கைக்கும் அவநம்பிக்கைக்கும் இடையே மாறி மாறி ஊசலாடிக் கொண்டிருந்த தன் மனத்தின் காரணமற்ற பரபரப்பைக் கட்டுப்படுத்திக்கொள்ள அவள் பெரு முயற்சி செய்த வண்ணமாயிருந்தாள்..





### காலத்துக்கேற்ற அறிவிப்பு!

இப்போதெல்லாம் மேனாட்டு விமான நிலையங்களிலும் அவற்றின் அருகில் சுற்று வட்டாரங்களிலும் படத்தில் உள்ளது போன்ற அறிவிப்புப் பலகைகள் உள்ளனவாம். இதன் பொருள்?

''ஹைஜாக் ஜாக்கிரதை!'' - தேஜ்

---

இந்தத் தடவை வந்த பையன் பொது நிறமாக இருந்தான். அவன் துருதுருவென்று களையாக இருந்ததைக் காயத்ரி கவனித்தாள். 'பிடிக்கிறது', 'பிடிக்கவில்லை' என்றெல்லாம் அபிப்பிராயம் கொள்ளுகிற மன நிலையை, அவளை அதற்கு முன்னால் பார்த்துச் சென்றவர்கள் அவளிடமிருந்து பறித்து விட்டமையால், காயத்ரி எந்த அபிப்பிராயமும் கொள்வதை விட்டு, அமைதியாக எழுந்து உள்ளே போனாள். அவர்களும் ஏனையோரைப் போன்றே 'போய் எழுதுவதாக'ச் சொல்லிச் சென்றார்கள்.

இரண்டு நாட்கள் கழிந்தன. 'பணமே! உன்னாலென்ன குணமே' என்ற வேத நாயகம் பிள்ளையின் பாட்டைப் பாடிய வண்ணம் சமையலறையில் தயிர் கடைந்து கொண்டிருந்த மனைவியின் முன் கையில் பிடித்த கடிதமும் வாயில் வழிந்த சிரிப்புமாக வந்து நின்ற ராமநாதன், ''விசாலம்! 'பணமே, உன்னாலென்ன குணமே'ன்னுபாடிண்டிருக்கே? அடி பைத்தியக்காரி, பணந்தாண்டி இந்தக் காலத்திலே பிரதானம். அது இருந்தால் எதை வேணும்னாலும் சாதிக்கலாம்கிறதுக்கு இதோ பாருடி பிரத்யட்ச உதாரணம்!'' என்றவாறு அவள் முகத்துக்கு நேரே ஒரு கடிதத்தை நீட்டினார்.

''கடுதாசி யார் போட்டிருக்கா?''

''காயத்ரியைப் பார்த்துவிட்டுப் போன பையன்தான் போட்டிருக்கான்.''

''என்னவாம்?''

''காயத்ரி கறுப்பா யிருக்கிறதாலே...''

''பழைய பல்லவிதானாக்கும்? அதுக்கு ஏன் உங்களுக்கு இவ்வளவு கும்மாளம்?''

''முழுக்கக் கேளுடி. காயத்ரி கறுப்பா யிருக்கிறதாலே, நாம் கொடுக்கிறதாய்ச் சொன்ன மூவாயிரத்தோடு இன்னொரு ஆயிரம் சேர்த்துக் கொடுத்தால் அவளைப் பண்ணிக்கத் தயார்னு எழுதி யிருக்கான். கூட ஆயிரம்தானே செலவு? எப்படியாவது காயத்ரிக்குக் கல்யாணம் நடந்தால் சரி.''

அந்த இளைஞன் தன் பெண்மையையே காலடியில் போட்டு நசுக்குவதாகத் தோன்றிய மனக் குமுறலில் காயத்ரிக்குப் படபடவென்று வந்தது. 'ஆயிரம் ரூபாய் அதிகப்படியாக வரதட்சிணை கொடுத்தால் கறுப்பு சிவப்பாகி விடும் போலும். என்ன கேவலம்! இந்த ஆண்பிள்ளைகள்தாம் பெண்களை எப்படியெல்லாம் இழிவு படுத்துகிறார்கள்!'—சட்டென்று அவள் கண்கள் சிவந்தன. வாய் விட்டு ஒரு குரல் அழவேண்டும் போலிருந்தது.

அவள் தன்னுள் பீறிட்டெழுந்த உணர்ச்சிகளை உள்ளடக்கிய வண்ணம் தன் பெற்றோர் முன் போய் நின்றாள். ''நான் ஒண்ணும் அவனைப் பண்ணிக் கொள்ளத் தயாராயில்லே. அதிகப்படியா ஆயிரம் ரூபாய் கொடுத்தால் என் கறுப்பு சிவப்பாகி விடுமாக்கும்?''

உதடுகள் துடிக்க மகள் கேட்ட ரோசம் நிறைந்த நியாயமான கேள்விக்கு என்ன பதிலைச் சொல்வதென்று தோன்றாமல் அவர் அவளைப் பார்த்தபடி திகைத்து நின்றார்.

''வெண்ணெய் திரண்டு வர்ற சமயத்திலே தாழி உடைகிற மாதிரி இத்தனை பிள்ளைகள் பார்த்துவிட்டுப் போனப்புறம் தெகைஞ்சிருக்கிற கல்யாணத்தை நீயே கெடுக்காதே, காயத்ரி. நம்ம பொண்ணுக்கும் கல்யாணம்னு ஒண்ணு ஆகப்போறதான்னு கவலைப்பட்டு ராப்பகலாய் நான் தூங்காமே இருக்கிறது எனக்குத்தானே தெரியும்? உனக்கென்னடி? இள ரத்தம். சட்டம் பேசுவே'' என்றாள் விசாலம்.

ராமநாதன் பேசாது நின்றார். காயத்ரி மேற்கொண்டு வாதாடாமல், தன் அறைக்குச் சென்று கடிதம் எழுதலானாள்:

'ஐயா, ராமதுரை அவர்களே,

அதிகப்படியாக ஆயிரம் ரூபாய் கொடுத்தால் என் கறுப்பு உம் கண்களுக்குச் சிவப்பாகத் தெரியும் போலும். உம்மைப் போன்ற பணப் பிசாசுக்கு வாழ்க்கைப்படுவதை விட நிறப் பிசாசுக்கு வாழ்க்கைப்படுவதே மேல் என்று நான் நினைக்கிறேன். உம்மை மணக்க நான் தயாராக இல்லை என்பதை அறிவீராக.'

கடிதத்தை எழுதி முடித்து விட்டு அதை ஒரு புத்தகத்துக்குள் வைத்துவிட்டுத் தலைநிமிர்ந்த காயத்ரி தந்தை தன்னை நோக்கி வந்து கொண்டிருந்ததைக் கண்டு எழுந்து நின்றாள்.

''அம்மா, காயத்ரி! உலகம்கிறது நீயும் நானும் விரும்புகிற மாதிரியோ எதிர்பார்க்கிறமாதிரியோ இருக்காதம்மா. கூட ஆயிரம் ரூபாய் கொடுத்தால் உன் கறுப்புக்கு அது நஷ்ட ஈடுன்னு அவன் நினைக்கிறான். அப்படி அவன் நினைக்கிறது எவ்வளவு அநாகரிகம்கிறது எனக்குத் தெரியாதாம்மா?... அதனாலே உன் மனசு எவ்வளவு புண்படும்னு எனக்குப் புரியறது, காயத்ரி. என்னம்மா செய்யறது? உன் தோற்றத்திலே இருக்கிற குறையைப் பணத்தாலே அழிக்க முடியறப்போ, அப்படிச் செய்ய மாட்டேன்னு பிடிவாதம் பிடிச்சா, அதனாலே யாருக்கு என்ன லாபம்?... எனக்கு வர வர உடம்பு தள்ளலே. வயசு ஆயிண்டிருக்கு பாரு. காலா காலத்திலே என் கடமைகளை முடிச்சுட்டேன்னு நிம்மதியாக் கண்ணை மூடுவேன்...'' என்று தழுதழுத்த குரலில் கூறி முடித்த அவர் கண் கலங்க நின்றபோது காயத்ரியின் மனம் நெகிழ்ந்து போயிற்று. தன்மானம் மிகுந்த ஒரு படித்த பெண்ணின் நியாயமான அருவருப்பையும் ஆத்திரத்தையும் புரிந்து கொண்டு பேசிய அவர் சொற்கள் அவள் மனத்தைத் தொட்டு வேதனை செய்தன.

''சரியப்பா, உங்க இஷ்டப்படியே செய்யுங்கோ...''

ராமநாதன் அவ்விடம் விட்டு அகன்றதும், காயத்ரி ராமதுரைக்கு எழுதி வைத்திருந்த கடிதத்தைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்தெறிந்தாள்.

# ஃப்ளூ தாக்குதலைத் தடுத்திடத் தலைசிறந்த பாதுகாப்பு.... உங்கள் மருந்துப் பேழையிலே!*

## எடுங்கள்....




## இடுங்கள்....

# டெட்டால்

இட்டால், ஃப்ளூ கிருமிகளினின்று உங்கள் இல்லத்தைக் காப்பது டெட்டால்

1. மூக்குச் சிந்திய கைக்குட்டை, நோயாளியின் படுக்கை விரிப்பு, உடுப்பு— அனைத்தையும் டெட்டால் நீரிலே தோய்த்திடுவீர்... உங்கள் அன்றாடத் துணிகளை அலசுவதற்கும் உகந்தது டெட்டால்.
2. நோயாளி குளிக்கும் நீரிலே, துடைக்கும் துவாலையிலே, ஸ்பாஞ்சிலே சில சொட்டு டெட்டால் விடுங்கள், குழந்தைகளுக்கும் நல்ல பாதுகாப்பு.
3. நோயாளியறையின் தரையிலே, குளியலறையிலே... இட்டு மெழுகுவீர் டெட்டால் நீரை. வீடுமுழுதும் அதேபோல் துடைக்கலாம்.
4. டெட்டால் கரைத்த நீரிலே தெர்மாமீட்டரை அமிழ்த்தி வைத்திருக்கலாம்.



* இல்லையேல் வாங்கி வைத்துக்கொள்க!

டாக்டர்கள் நம்பி உபயோகிப்பது

## புதுமைக் கோல டெட்டால்

**பரிபூரண ஆன்டிஸெப்டிக் பாதுகாப்பு**

லின்டாஸ்-DTL. 4-140 TM

# வட்ட மேஜை

★ இக் குறிப்பிட்ட கடிதம் ரூ. 15 பெறுகிறது.

★மாநிலப் பிரச்னையான மதுவிலக்கை, அகில இந்தியப் பிரச்னையாக்கித் தாம் தப்பித்துக் கொள்ளப் பார்க்கிறார் கலைஞர். மதுவிலக்கின் மூலமான வருவாயை மனத்தில் கொண்டு மதுவிலக்கை எடுப்பதில் முனைந்துவிட்ட அவர், அதன் மூலமாகப் பத்து அல்லது பதினைந்து கோடி வருமானத்தை எதிர்பார்த்தும், பட்ஜெட் என்னவோ பற்றாக்குறைதான்! எப்படியோ, ''ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்போம்'' என்று சொன்னவர்கள், இனி மேல் ஏழையின் சிரிப்பில் போதையைக் காண்பார்கள்!

சென்னையில் மட்டுமிருந்த நகர்ப்புற மனைகளின் மீதான வரி இப்பொழுது கோவை, மதுரை, சேலம், திருச்சி ஆகிய நகரங்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. இதுவரை மனையின் மதிப்பின் மீது 0.4 சதவிகிதமாக இருந்த வரிவிதிப்பை, மனையின் பரப்பிற்கு ஏற்பக் குறைந்தபட்சம் 0.5 சத விகிதம் என்று உயர்த்தி ஆனந்தம் அடைந்திருக்கிறார்கள். இதனால் புது ஜாகைகளின் கட்டுமானம் பாதிக்கப்படும் என்பதையோ, வீட்டு வாடகைகள் உயரக் கூடும் என்பதையோ கலைஞர் அரசு உணராதது ஆச்சரியமே!

சென்னை நகரில் மட்டும் பல முனை விற்பனை வரியை மூன்று சத விகிதத்திலிருந்து மூன்றரை சத விகிதமாகவும், மற்றும் விற்பனைவரியின் மீதாக *ஸர்சார்ஜு*ம் உயர்த்தப்பட்டிருக்கிறது. ''சென்னை நகரில் மட்டும்தானே?'' என்று கலைஞர் சொல்லக் கூடும். சாமானியர்களும் அதை நம்பக் கூடும். தலை(நகரில்)யில் கோளாறு ஏற்பட்டால் அது மற்ற அவயவங்களையும் பாதிக்கக் கூடும் என்பதைச் சொல்லத் தேவையில்லை. சென்னை நகரில் விற்பனையாகும் பொருள்களைச் சென்னை வாசிகள்தாம் வாங்குகிறார்களா என்ன? சென்னை நகரில் செய்யப்பட்டுள்ள வரி விதிப்பானது மாநில அரசாங்க, மத்திய அரசாங்க ஊழியர்களின் வாழ்க்கைச் செலவுகளை அதிகரிப்பதோடு, மாநிலம் முழுவதும் எல்லா வகையான பொருள்களின் விலை உயரவும் காரணமாகும்.

எல்லாவற்றையும் விட விசனிக்கத் தக்க விஷயம் பஸ் போக்குவரத்தைப் பற்றிய கவர்னரின் அவசரச் சட்டம்தான். எந்தத் தனியார் ஸ்தாபனமாக இருந்தாலும், அந்த ஸ்தாபனம் அதிகபட்சமாகப் பத்து பஸ் ரூட்களைத்தான் வைத்துக் கொள்ளலாம். அதற்கு மேலுள்ள பஸ் ரூட்கள் தேசிய மயமாக்கப்படும் என்கிறது அவசரச் சட்டம்.

அவசரச் சட்டம் பெயருக்கு ஏற்றபடியே யோசிக்காமல் பிறப்பிக்கப்பட்ட அவசரச் சட்டம்தான். ஏற்கனவே தேசியமயமாக்கப்பட்ட தொழில்கள் பொதுமக்களின் வரிப் பணத்தை ஏப்பமிடக்கூடிய பூதங்களாகக் காட்சியளிக்கின்றன. நஷ்டத்தில் ஓடிக் கொண்டிருக்கிற தொழில்களையே இன்னும் சீர்திருத்தம் செய்த பாடாக இல்லை. அதற்குள் இன்னுமோர் அவசரச் சட்டம்!

சான்றாக, தமிழக அரசின் பஸ் போக்குவரத்தையே எடுத்துக் கொள்வோம். தமிழக அரசு போக்குவரத்தினால் 1968–69-ஆம் ஆண்டில் ஏற்பட்ட நஷ்டம் 32 இலட்சம் ரூபாய்; 1969–70ம் ஆண்டில் ஏற்பட்ட நஷ்டம் 53 இலட்சம் ரூபாய்.

பஸ் போக்குவரத்தில் தமிழகத்தின் மிகப் பெரிய ஸ்தாபனம் மதுரை, திருநெல்வேலி, திருச்சி ஆகிய பகுதிகளில் சுமார் ஐந்நூறு பஸ்களை நடத்திக் கொண்டிருக்கும் டி. வி. எஸ். ஸ்தாபனம்தான். நாளொரு மேனியாக வளர்ந்த அந்தப் பெருமைக்குரிய ஸ்தாபனம், அரசாங்கத் துறையைப்போல் இலட்சக்கணக்கான ரூபாய்களை நஷ்டம் அடைந்திருந்தால், இப்படி வளர்ந்திருக்குமா? 'கோவிந்தா' ஆகியிருக்கும்! மற்றும் அரசாங்கம் எடுத்துக் கொள்ளவிருக்கும் ஏ. பி. டி. நிறுவனமோ, ராமன் அண்டு ராமன் நிறுவனமோ, கும்பகோணம் ராம விலாஸ் நிறுவனமோ நஷ்டமடைந்தால் திவாலாவார்களே தவிர, அரசாங்க பஸ் போக்கு வரத்தைப் போல் நிலைக்க மாட்டார்கள்! அரசாங்கத்துக்கு நஷ்டத்தை ஈடுகட்ட மக்களின் வரிப் பணம் இருக்கிறது. தனியார் ஸ்தாபனங்களுக்கு ஏது அந்த வசதி?

தமிழக அரசு பஸ் போக்குவரத்து ஏற்கனவே நஷ்டத்தில் ஓடிக் கொண்டிருக்கிறது. அதையே சீர்திருத்த முடியாத தமிழக அரசு, இப்போது அவசரச் சட்டம் போட்டு மேலும் ஐந்நூறு பஸ் ரூட்களை எடுக்க நினைத்திருப்பது வேடிக்கையாகவும் வேதனையாகவும் இருக்கிறது. சோஷலிஸம் — சமதர்மம் — என்ற பெயரால் இப்படியெல்லாம் மக்களின் வரிப் பணத்தை வீணடிப்பது புத்திசாலித்தனமான காரியமல்ல.

பஸ் ரூட்கள் யாருடையதாக இருந்தாலும் மக்கள் தங்கள் பிரயாண வசதிகளைத்தான் வேண்டுவார்கள். அப்படிப்பட்ட வசதிகளை இதுவரையில் செய்யாமல் பல புகார்களுக்கு ஆளாகிக் கொண்டிருக்கிறது தமிழக அரசின் பஸ் போக்குவரத்துத் துறை. மேலும் அந்தத் துறையை விஸ்தரிக்கும் முயற்சி கேலிக்கூத்தாக முடியும்.

அந்தியூர்,
23–6–71 — மு. தவசியப்பன்

புதுமைப் பணி, புனிதப் பணி என்று தங்களுடைய பத்திரிகையில் சென்ற இதழில் ஒரு குறிப்பிட்ட சங்கத்தினரைப் பற்றிப் பாராட்டி நீங்கள் எழுதியிருந்ததை வரவேற்கிறேன். ஆனால் அதே சமயத்தில் 1948-ம் வருடம் ஸ்ரீமதி வை. மு. கோதைநாயகி அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட எங்கள் மகாத்மாஜி சேவா சங்கம் (திருவல்லிக்கேணி) புதுமை என்று நீங்கள் பாராட்டிய புனிதப் பணிகளை ஆரம்பித்த நாளிலிருந்து இன்று வரை தவறாமல் நடத்தி வருகிறது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். நீங்கள் குறிப்பிட்ட பணிகள் தவிர, அன்னை கஸ்தூரிபாய் தினமாகக் கருதி மகா சிவராத்திரி அன்று எண்ணற்ற ஏழைகளுக்கு ஒவ்வொரு வருடமும் கஞ்சி வார்க்கப்படுகிறது என்பதையும் பெருமிதத்துடன் எழுதுகின்றேன்.

சென்னை–5
17–6–71 — கமலா கோபு

---

* ஸர்சார்ஜு விகிதத்தை 10 சதத்திலிருந்து 5 சதத்துக்குக் குறைத்தும் சலுகை காட்டுவதுபோல் பிரமையை உண்டாக்கி இந்த உபரி வரி விதிப்பு முறையைத் திருச்சி, கோவை, மதுரை, சேலம் முதலிய நகரங்களுக்கும் இப்போது விஸ்தரித்திருக்கிறது அரசு.

''ராதை! ராதை தூங்குறீங்களா?...உங்களைத் தேடி யாரோ வந்திருக்காங்க ரெண்டு பேர்.''

''ம்... என்ன ஸிஸ்டர் நான்...நான்...தூங்கலேயே. சும்மா படுத்திருந்தேன். யாரு என்னைத் தேடியா? யாரு வந்திருக்கா? பேரு என்னவாம்?...''

''யாரோ கண்ணனாம்.''

''யாரு, கண்ணனா? ஸிஸ்டர் அவரை வரச் சொல்லு. உம்... வந்து இங்கே அந்த நாற்காலியை இழுத்துப் போட்டு...இல்லே, நானே போடறேன். வரச் சொல்லு ஸிஸ்டர்.'' ராதையின் உடம்பெல்லாம் பரபரத்தது.. முன்னால் விழுந்த முன்றானையை எடுத்துத் தோளில் போட்டுச் சரிபார்த்துக் கொண்டாள். கை தானகவே முன்னுச்சியிலிருந்து பின்புறமாக நகர்ந்து தலையைக் கோதிக் கொண்டது.

காது கூர்மையாக அறை வாசலில் செருப்போசையைப் பதிவு செய்து கொண்டது. காற்றோடு கலந்து வந்த ஷேவிங் லோஷன் வாசனை, சென்ட், அதையும் மீறிக்கொண்டு - சிகரெட் நெடி — ஆண் வாடை.... அறைக்குள் யாரோ வந்திருப்பதைத் தெரிவித்தது.

''கண்ணன்'' ராதை உணர்ச்சி மிக்க குரலில் கூப்பிட்டபோது அவள் கண்களில் மெதுவாக நீர் சுரக்க ஆரம்பித்திருந்தது.

# நெஞ்சின் பார்வை

நா. அனந்தகிருஷ்ணன்

''உம்!''

''உங்களோட கூட யார் வந்திருக்கா? உங்க தந்தையா?''

''கோபால்.''

''ஓ!'' — ராதையின் முகம் குங்குமமாய்ச் சிவந்தது. கோபாலைப் பற்றிக் கண்ணன் சொல்லக் கேட்டிருக்கிறாள் நிறைய. ஆனால் இதுவரையில் சந்தித்ததில்லை.

''நமஸ்காரம்.''

''நமஸ்காரம்.'' கோபாலின் குரலில் ஓர் அழுத்தம் இருந்தது.

''நர்ஸ், அந்த பீரோவிலிருந்து பழமும் பிஸ்கட்டும் எடுத்து அந்தத் தட்டிலே வைச்சுக் கொண்டு வா.''

''வேண்டாம். எங்களுக்கு ஒன்றும் வேண்டாம். இப்பொழுதுதான் டிபன் எல்லாம் ஆச்சு. சும்மா பார்த்துவிட்டுப் போகலாம்னு வந்தேன். உம், என்னிக்குக் கட்டு அவிழ்த்தார்கள்?'' என்று கண்ணன் கேட்டான். அவன் பார்வை அவள் கண்களில் நிலைத்தது.

''நேத்திக்கு.''

''டாக்டர் என்ன சொல்றார்?''

ராதையிடமிருந்து எந்தப் பதிலும் வரவில்லை.

''என்ன சொன்னார், சொல்லு.''

''நான்... நான் எப்படிச் சொல்லுவேன்? இனிமேல் என்னால் எதையும் பார்க்க முடியாது... நான்... நான்... குருடி... கண்ணா நான்...'' ராதைக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. கைகளால் முகத்தை மூடிக்கொண்டு விசும்பி விசும்பி அழுதாள்.

''ஸ்...அழாதே... அழாதே. என்ன பிரயோசனம்?'' கண்ணனின் குரலில் நிராசை தொனித்தது.

சில நிமிடங்கள் அவ்விடத்தில் மௌனம் நிலவியது. உஷ்ணமான நீண்ட பெருமூச்சுகள் ஒன்றிரண்டு உதிர்ந்தன. கொக்கி இல்லாததால் ஜன்னல் 'பட்பட்' என்று இரண்டு முறை தானே சாத்திக் கொண்டது காற்று வேகத்தில். வேப்ப மரத்தில் அணில் கீச்சிட்டதைத் தவிர வேறு ஒலியில்லை.

மௌனத்தைக் கலைத்துக் கொண்டு கண்ணன் கேட்டான்: ''நர்ஸ், டாக்டர் என்ன சொன்னார்?'' ஏன், ராதை சொன்னதில் நம்பிக்கை இல்லையா?

''இவங்க பார்வை திரும்பறது ரொம்பக் கஷ்டமாம். ஆபரேஷன் பண்ணினாலும் ஒரு வேளை பார்வை



கிடைக்கலாம்; ஆனால் அதுக்கு இங்கே வசதி இல்லே. மேல் நாட்டிலே தான்—''

''ஓ!'' கண்ணன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

''கண்ணா....! என்ன பேசாமல் இருக்கிறீர்கள்? என்ன யோசிக்கிறீர்கள்? தெரியும். சொல்லட்டுமா?''

''உம். சொல்லேன்.''

''தனியாகச் சொல்லுவேன். இப்படி எல்லார் முன்னிலுமா? ஊஹும்.'' ராதை குறும்பாகச் சிரித்தாள்.

''ராதை நேரமாகிறது. நான் வரட்டுமா?''

''என்னது? போகப் போகிறீர்களா? வந்து... ஒண்ணுமே சாப்பிடலேயா?''

''அதுதான் சொன்னேனே, ஒண்ணும் வேண்டாம். எனக்கு நேரமாகிறது. நான் வரட்டுமா?''

ராதை ஒன்றும் பேசவில்லை.

''என்ன ராதை, பேசாமல் இருக்கிறாய்? நான் வரட்டுமா?''

''நிஜமாகவே போகப் போகிறீர்களா? நீங்கள் விளையாட்டுக்குச் சொல்கிறீர்களோ என்று நினைத்தேன். உம்... அப்படீன்னா ஒண்ணுமே சொல்லாமல் போனால் எப்படி?''

''நான் என்ன சொல்லுவது? உனக்குத் தெரியாததா?''

''அப்படி யென்றால்?'' துக்கம் தொண்டையை அடைக்க மறுபடியும் கைகளில் முகத்தைப் பதித்துக் கொண்டு விம்மலை அடக்க முயன்றாள் ராதை.

யாரோ கனைக்கிற குரல் கேட்டது. அழுத்தமான குரலில் கோபாம் கூறினான்: ''வந்து... மிஸ் ராதை, கண்ணனை நீங்கள் நிஜமாகவே விரும்புவதாக இருந்தால் நீங்கள் அவனைக் கட்டாயப் படுத்தக்கூடாது. அவனால் எப்படி உங்களைக் கல்யாணம் செய்து கொள்ள முடியும்? காதல் வேறு வாழ்க்கை வேறு இல்லையா? மன்னிக்கணும்!''

கண்ணன் அவள் அருகில் வந்து மெல்லிய குரலில் சொன்னான்: ''நாம் நண்பர்களாகவே பிரிவோம். என்னை உன் சிநேகிதனாக நினை. ஏதாவது வேண்டுமென்றால் கடிதாசி...



## பார்வதிக்குப் புரிந்தது!

மகாதேவனைப் பார்த்துப் பார்வதி தேவி கேட்டாள்: "ஏன் சிலரைப் பணக்காரராகவும், சிலரை ஏழைகளாகவும் படைத்திருக்கிறீர்கள்? எனக்குப் பிடிக்கவில்லை!" ஆகவே, மகாதேவனும் தேவியின் வேண்டுகோளின்படி எல்லோரையும் பணக்காரர்களாக்கிவிட்டான். ஒரு நாள் கோயில் கூரை ஒழுகியது. நிறையச் சம்பளம் தருவதாகச் சொல்லியும் யாரும் அதைச் சீர்ப்படுத்தும் பணியைப் புரிய முன்வரவில்லை. பார்வதி தேவிக்கும் புரிந்தது. எல்லாரும் பணக்காரர்களாகி விட்டார்கள்; யாருக்கும் வேலை செய்ய வேண்டிய நிலை இல்லை!



"பிரபோ! முன்னிருந்தபடியே ஏழை பணக்காரர்களை ஏற்படுத்தி விடுங்கள்!" என்று வேண்டினாள் பார்வதி தேவி.

இல்லே, இல்லே... சொல்லி அனுப்பு. உன் நிலைமைக்காக நான் ரொம்பப் பச்சாதாபப் படுகிறேன் ராதை. நான் வரேன்.''

''நான்'' என்று கோபமாய்க் கூப்பிடுகிற குரல் கேட்டது. என்ன சொன்னாளோ?

ராதையின் கால்கள் நடுங்கின. தளர்ந்து அவள் அப்படியே கட்டில் விளிம்பைப் பிடித்தபடி உட்கார்ந்தாள். அழக்கூட முடியாதபடி திக்பிரமை பிடித்திருந்தது அவளுக்கு.

இப்படி ஆகுமென்று யார் கண்டது? பார்வையில் ஏதோ கோளாறு — ஆபரேஷன் என்றார்கள். அது இப்படிக் குருட்டிலா வந்து முடிய வேண்டும்?

கண்தான் பார்வை இழந்ததே தவிர நெஞ்சு நினைவை இழக்கவில்லையே? ராதையின் மனம் நடந்ததை யெல்லாம் எண்ணிப் பார்த்தது.

இந்தக் கண்ணனை அவள் கண்டதும் அவனிடம் மையல் கொண்டதும் யாருக்கும் தெரியாது. அப்பாவிடம் சொன்னபோது காதலாவது கருமாதியாவது என்று அவர் குதியாய்க் குதித்தார். ஒருமாதிரியாக அவரைச் சம்மதிக்க வைத்து இன்னும் இரண்டு மாதங்களில் கல்யாணம் என்று இருக்கும் போதா இப்படி ஆகவேண்டும்?

கண்ணன் செய்தது நியாயமா? தனக்குத் தானே கேட்டுக் கொண்டாள் ராதை. இத்தனை உறவும் நெருக்கமும் ஏற்பட்டு அவ்வளவும் பட்டென்று போய்விடுமா? கண் போனால் எல்லாம் போய்விடுமா? ஒரு பக்கம் அவன் செய்தது சரிதான் என்று தோன்றிற்று. பின்னே? கல்யாணம் சௌகரியத்தை உத்தேசித்துச் செய்து கொள்வது. குருடியைக் கட்டிக் கொண்டு எவன் மாரடிப்பான்? நிஜமாகவே நல்லவேளை கண்ணனுக்குக் கண் போய்த் தான் பார்வையோடிருந்தால் என்ன செய்திருப்பாள்? இந்தக் கேள்வியைக் கேட்டு விட்டுத் தனக்குத் தானே சிரித்துக் கொண்டாள் ராதை. நிச்சயம் அவனைக் கல்யாணம் செய்து கொண்டிருப்பாள். அவனை எந்த உத்தியோகத்துக்கும் போக விடாமல் தானே சம்பாதித்துப் போட்டுக் கொண்டு அவனை வீட்டில் ராஜா மாதிரி வைத்திருப்பாள். நிஜமாகவா! அப்படியானால் கண்ணன் மட்டும் இப்படி உதறிவிட்டது ஏன்? ஊம்... அதுவா? அவன் ஆண். தான் பெண்.

ராதைக்குத் தலைவலி மண்டையைப் பிளந்தது. வீட்டில் கூடத்து உள்ளில் மர அலமாரியின் மேல்தட்டில் உள்புறமாய் வைத்திருக்கும் ஒரு கட்டுக் கடுதாசி. பட்டு ரிப்பனால் சுற்றி வைத்திருக்கிறது. இனி தன்னால் படிக்க முடியாது. அதனால் என்ன? அத்தனையும் அவளுக்கு மனப் பாடம் ஆயிற்றே? அதைத் தொட்டாலே அவளுக்குத் தெரியும். அதில் கண்ணன் எப்படி எப்படி வருணித்திருப்பான் என்பது. உம். இனி கையால் தடவிப் பார்க்கவேணும்.

நல்லவேளை! இது இப்பொழுது நடந்ததே நல்லதாயிற்று. கல்யாணத்துக்கப் புறம் இப்படி ஆகியிருந்தால்? பாவம், கண்ணன் அவஸ்தைப்பட்டுப் போயிருப்பார்; துப்பவும் முடியாது விழுங்கவும் முடியாது என்று. நல்ல வேளை பிழைத்தேன்!

'டொக், டொக்' கைத்தடியின் ஓசை. அப்பாவா?

''உம்.... அவன் வந்தானாமே? என்ன சொன்னான்?'' அப்பா தான் கேட்கிறார்...

''என்ன சொல்லுவார்? விவேகமுள்ளவர்கள் எதைச் சொல்வார்களோ அதைச் சொன்னார். கல்யாணம் செய்துகொள்ள முடியாது என்று சொன்னார்.'' வெடுக்கென்று பட்டும் சொன்னாள் ராதை.

''என்னது, முடியாதுன்னானா? என்ன நினைச்சான் இவன்? ரெண்டு மாசத்திலே முகூர்த்தம் வைச்சிருக்கு. இப்ப திடீர்னு முடியாதுன்னு? இவனைப் பார்த்திடறேன் ரெண்டில் ஒன்று.''

தன் காதலைத் தெரிவித்தபோது அப்பா சொன்னது ராதைக்கு நினைவுக்கு வந்தது. 'என் பெண்ணுக்கு ஒரு பட்டதாரியைத் தவிர வேறு யாரும் வேண்டாம்' என்று ஜம்பமாகப் பேசினார். அவர் கண்ணில் கண்ணன் மிகவும் துச்சமாகப் பட்டான். ஆனால் இப்பொழுதோ?

''அப்பா!'' ராதை கூப்பிடவில்லை; கத்தினாள். ''யாரு தலையிலேயும் என்னை வலுக்கட்டாயமாகக் கட்டாதீர்கள் அப்பா... உங்கள் பெண் குருடி என்பதை மறந்துவிடாதீர்கள். இதே கண்ணனை எனக்குப் புருஷனாக ஒப்புக்கொள்ள மறுத்தீர்களே மூணு மாசத்துக்கு முன்னால். இப்போ மட்டும் என்னப்பா இத்தனை ஆத்திரம்?''

''ராதை!'' அப்பா எதுவும் பேசவில்லை. கோபம் அதிகமாகி விட்டால் அவருக்குப் பேச்சு வராது.

ராதையை வீட்டுக்கு அழைத்து வந்தாயிற்று. முன்பக்கத்து அறையில் மஞ்சள் கடம்புக் கட்டில்தான் அவள் இருப்பிடம். அவளுடைய நிலைமை உணராதவர்கள் யாருமில்லை அந்த வீட்டில். அந்த அறையை விட்டு அவள் வரவேண்டியதில்லை என்பது அப்பா உத்தரவு. ரேடியோவையும் அந்த அறை

# பெருமையோடு சவாரி செய்யுங்கள்

## இந்தியா சூப்பர்

உன்னதமான நவீன கார் டயர்



சில்லறை விற்பனைகளுக்காக சிபாரிசு செய்யப்பட்ட விலைகள் (விற்பனை மற்றும் தலவரிகளைத் தவிர்த்து) ■ அம்பாஸிடர் 5.90—15 W.S.W. 6 P.R.—டயர் ரூ. 174.99, ட்யூப் ரூ. 21.53 ■ ஃபியட் 5.20–14 W.S.W. 6 P.R.–டயர் ரூ. 149.99, ட்யூப் ரூ. 18.82

யிலேயே மூலையில் மேசை போட்டு அதன் மீது வைத்திருந்தது. அண்ணா பையன் ரமணன் வந்து அவளுக்குப் பத்திரிகை வாசித்துக் காட்டுவான். ரேடியோ — தூக்கம் — பாட்டு — வாசிப்புக் கேட்பது — யந்திர கதியில் அவள் வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தாலும் மனம் எதையோ எண்ணி ஏங்கிக் கொண்டிருந்தது. தன் முடிவை மாற்றிக் கொண்டு கண்ணன் ஒரு நாள் வந்தாலும் வரலாம் — இப்படி ஒரு நினைப்பு.

அப்பா வெளியே போயிருக்கிற சமயமாய் மெள்ளச் சுவரைத் தடவிக் கொண்டு சமையற்கட்டுப் பக்கமாய் வருவாள். உடனே அம்மா வந்து இவள் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்வாள். 'ராதை, ராதை! நீ ஏண்டி இங்கே வர்றே?' என்று கேட்டால் 'அம்மா எப்படி அம்மா சும்மா இருப்பது? எனக்கு ஏதாவது வேலை குடும்மா. தவிரா நாளும் கடையறேனம்மா' என்று கெஞ்சுவாள்.

பாட்டி விரைந்து கட்டிக்கொண்டு வந்து விடுவாள் — ''குழந்தே! நீ போய் அறையிலே உட்கார்ந்துக்கோ. இங்கே இருக்கிற பெண்டுகளுக்கே காரியமில்லை. உனக்கு ஏதுக்கடி?''

அம்மாவோ பெரிய மன்னியைக் கூப்பிட்டு ''லட்சுமி, ராதையோட அறைலே போய் உட்கார்ந்துண்டு அவளுக்கு ஏதாவது வாசிக்கக் காட்டு'' என்று இரண்டு பேரையுமாகத் துரத்தி விடுவாள்.

அப்படி ஏதோ மாதிரி வாழ்க்கை போய்க் கொண்டிருக்கும்போதுதான் ஒரு நாள்—

'ராதை! தபால்!' என்ற குரல் கேட்டு ரேடியைாவைப் பட்டென்று நிறுத்திவிட்டு எழுந்து வந்த வேகத்தில் நிலைப்படியில் மோதிக் கொண்டாள் ராதை. அதைப் பொருட்படுத்தாமல் கூடத்துக்கு அவள் வந்ததும் அதற்குள் மன்னி போய் அந்தக் கடுதாசியை வாங்கிக் கொண்டு வந்துவிட்டாள். அம்மாவும் சமையற்கட்டிலிருந்து கூடத்துக்கு வந்தவள், ''என்னடி அது கல்யாணக் கடுதாசி மாதிரி இருக்கு, மஞ்சள் தடவி யிருக்கே'' என்றாள்.

ராதைக்கு அதிசயமாக இருந்தது. ''கல்யாணமா? யாருக்கு? மன்னி! அதை எங்கிட்டே குடு.'' மனதும். சட்டென்று தன் நிலைமை புரிந்தது. ''இல்லை, இல்லை. அதைப் படிச்சுச் சொல்லு. யாருக்குக் கல்யாணம்?''

மன்னி பதிலே பேசவில்லை. உறையைப் பிரித்துப் பத்திரிகையைப் பார்க்க இவ்வளவு நேரமா?

''என்ன மன்னி?''

அம்மாதான் பதில் சொன்னாள். மன்னி அதை அம்மா கையில் கொடுத்துவிட்டாள் போலிருக்கிறது.

''வந்து... வந்து.... அவனுக்குக் கல்யாணம்.''

''யாருக்கு?''

'' அதுதாண்டி, அவன்....... அவன்...கண்ணன் — அவனுக்கு.''

ராதை எதுவும் பேசவில்லை. நிலைப்படியில் இடித்துக் கொண்டது இப்பொழுதுதான் வலி தெரிகிறாற்போலிருந்தது. சுவரைப் பிடித்துக் கொண்டு மெல்லத் தன் அறையை நோக்கி நகர்ந்தாள். கதவைத் தாளிடும் போது அம்மா புடவைத் தலைப்பை வாயில் திணித்துக் கொண்டு விசும்புகிற குரல் அவள் காதில் விழுந்தது.

பார்வை இழந்தபோதிலும் அறையில் அடைந்து கிடக்காமல் வெளியே வந்து நாலு பேருக்கு உதவியாக இருக்க முயல வேண்டும் என்ற ராதையின் ஆர்வம் அந்தக் கணத்தில் செத்துச் சமாதி கண்டுவிட்டது.

## சரியாகத்தான்



## சொன்னாரோ!

பஞ்சாப் பல்கலைக் கழகத்தின் எஸ்.எஸ். எல்.சி. பரீட்சை கேள்வித்தாள் ஒன்றில் ''ஒரு ராஜ்ய முதலமைச்சரின் முக்கிய கடமைகள் என்னென்ன?'' என்று ஒரு கேள்வி கேட்கப் பட்டிருந்தது. அதற்கு ஒரு மாணவன் எழுதிய பதில்: ''அஸ்திவாரக்கல் நாட்டுவது, விழாக்களைத்தொடங்கி வைப்பது, தலைமை தாங்குவது, கூட்டங்களில் பேசுவது.''

ஆதாரம்: ''டெக்கான் ஹெரால்ட்''

தகவல்: சரோஜா ராமச்சந்திரன்

## ஓம்! ஹிரண்யாய நம:!

கியூபா பிரதமர் காஸ்டிரோ, தம் நாட்டு மக்களிடையே நாத்திகத்தைப் பரப்ப விநோதமான வழியைக் கடைப்பிடிக்கிறார்.

சிறுவர்கள் பள்ளியில் சேர்ந்ததுமே அவர்களுக்கு நாத்திகம் போதிக்கப்படுகிறது. அது மட்டுமின்றி, சிறுவர்களைக் கடவுளிடம் தின்பண்டம் தரும்படி வேண்டச் சொல்வார்கள். சில தினங்கள் இப்படி வேண்டச் சொல்லிவிட்டு, இவர்களுக்குத் தின்பண்டம் கிடைக்காத பின், 'காஸ்டிரோவை வேண்டுங்கள்' என்று கூறுவார்கள். சிறுவர்கள் காஸ்டிரோவை வேண்டியதும், ''பாருங்கள், கடவுளை வேண்டுவதைவிட காஸ்டிரோவை வேண்டினால் கிடைக்கும்'' என்று கூறி அவர்களிடம் தின்பண்டம் வழங்குவார்கள். இப்படிக் கடவுளைவிட 'காஸ்டிரோ' சக்தி வாய்ந்தவர் என்ற எண்ணத்தை முளையிலேயே ஏற்படுத்தி விடுகிறார்கள்!



ஆதாரம்: ''டைம்ஸ் வீக்லி'

தகவல்: சம்பத்குமார்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31

Managing Editor: T. Sadasivam

# ANNOUNCING!

The sale of

**BLENDED AND FANCY FABRICS**

made by mixing cotton and

**GRASIM** STAPLE FIBRE

from to-day at

**AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY**

- *Attractive Fancy Dress material for ladies*
- *Immaculate Bush Shirtings for gents*
- *Decorative Tapestry and Curtain materials*
- *Priced cheaper than cotton fabrics*



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceyl